# மாணவர் மாணவியருக்கு நீதிக் கதைகள்

முல்லை பிஎல்.முத்தையா

மாணவர் மாணவியருக்கு

# நீதிக் கதைகள்



மாணவர் மாணவியருக்கு நீதியை
விளக்கும் 60 கதைகளின் தொகுப்பு



முல்லை பி.எல். முத்தையா

முல்லை
பதிப்பகம்
323/10, கதிரவன் காலனி
அண்ணாநகர் மேற்கு, சென்னை 40
தொலைபேசி: 26163596, 9840358301
e-mail:mullaipathipagam@yahoo.com

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Maanavar Maanaviyar Needhi Kathaigal |
| Language | : | Tamil |
| First Edition | : | June 1998 |
| Second Edition | : | October 2006 |
| Author | : | Mullai PL. Muthiya |
| Copy right | : | Author |
| Paper used | : | Cream wove 10.5 kg. |
| Size of the Book | : | Crown 18.5 x 12.5 cms. |
| Type Point | : | 12 Point |
| Number of Pages | : | 96 |
| Publisher | : | Mullai Pathipagam, 323/10,Kathiravan Colony, Anna Nagar West, Chennai - 600 040. Phone : 26163596 |
| Printed at | : | Surya Printers & Binders, Chennai-600 014. |
| Binding | : | Section Stitching |
| Price | : | **Rs. 25.00** |
| Subject | : | Stories for Students |

# இதில் உள்ள கதைகள்

# 1

# சிங்கத்தை வெற்றி கொண்ட கொசு

காட்டில் படுத்திருந்த சிங்கத்திடம் போய் ஒரு கொசு பேசத் தொடங்கியது.

"என்னைவிட நீ பலசாலி என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய் அல்லவா? அது மிகவும் தவறு.

"உன் வலிமை எப்படிப்பட்டது? பற்களை நறநற என்று கடித்து, நகங்களால் பிறாண்டுகிறாய், இது எப்படி இருக்கிறது என்றால், ஏழைப் பெண் தன் கணவனுடன் சண்டையிடுவதைப் போலத்தான் இருக்கிறது. சரி, வா, நாம் இருவரும் சண்டை போட்டுப் பார்ப்போம்" என்றது உடனே இது 'ஞொய்' என்று ரீங்காரம் செய்து கொண்டு சிங்கத்தின் மீது பறந்து, அதன் நாசியிலும், தாடையிலும் கடிக்கத் தொடங்கியது.

சிங்கம் கொசுவை விரட்ட, தன் நகங்களால் முகத்தைப் பிறாண்டியும், தட்டியும் தோலைக் கிழித்துக் கொண்டதில், இரத்தம் வழிந்ததோடு, களைத்தும் போய் விட்டது.

வெற்றி முழக்கத்தோடு கொசு பறந்து சென்றது. சிறிது நேரத்தில் அந்த கொசு ஒரு சிலந்தி வலையில் சிக்கிக் கொண்டது. சிலந்தி கொசுவின் இரத்தத்தை உறிஞ்சியது.

"வலிமை மிகுந்த சிங்கத்தையே வெற்றி கொண்டு, இப்போது ஓர் சிறிய சிலந்தி என்னை வதைத்துக் கொண்டிருக்கிறதே" என்று கொசு வருந்தியது.

# 2
# எந்த விரல் முக்கியம்?

ஒரு நாள், கையில் உள்ள ஐந்து விரல்களுக்குள் எந்த விரல் முக்கியமானது என்ற பிரச்சினை உண்டாயிற்று.

கட்டை விரல், "நான் தான் முக்கியம், என் உதவி எல்லோருக்கும் தேவை" என்று பெருமையுடன் கூறியது.

அடுத்த விரல், "என்னைக் கொண்டே எல்லோரும் சுட்டிக் காட்டுவதால், என்க்கு, 'ஆள்காட்டி விரல்' என்று பெருமை உண்டு" என்று கூறியது.

நடுவிரலுக்கு மிகவும் கோபம், "எல்லோரையும் விட நானே உயரமானவன்" என்று இறுமாப்புடன் கூறியது.

நான்காவது விரல் அமைதியாக, "உங்களில் எவருக்கும் இல்லாத பெருமை எனக்கு மட்டுமே உண்டு. தங்க மோதிரத்தையோ வைரமோதிரத்தையோ என்மீது போடுவதால், மோதிர விரல்" என்ற மதிப்பு எனக்கே உண்டு" என்று அமைதியாகக் கூறியது. ஐந்தாவது விரலான சுண்டு விரல், "வணக்கம் என்று சொல்லி ஒருவரை வணங்கினாலும், அல்லது கடவுளை வணங்கினாலும், எப்போதும் நான்தான் முதலில் நிற்கிறேன். நீங்கள் நால்வரும் எனக்குப் பின்னே அல்லவா நிற்கிறீர்கள்?" என்று கூறியது.

பிரச்சினை முடிவாகவில்லை.

அப்பொழுது, ஒருவன், 'லட்டு லட்டு' என்று கூறிக் கொண்டிருந்தான்.

எல்லா விரல்களும் ஒன்று சேர்ந்து அவனிடம் லட்டை வாங்கிக் கொண்டன.

*இப்பொழுது எந்த விரல் முக்கியமானது?*

# 3

# எளியோரை அழிப்பது எளிது

வழி தவறிய ஆட்டுக்குட்டி, தன் தாயைத் தேடி அலைந்தது. தாயைக் காணவில்லை. களைப்பு மிகுந்தது ஆட்டுக்குட்டிக்கு. அருகில் இருந்த ஓடையில் தண்ணீர் பருகத் தொடங்கியது.

அப்போது, சிறிது தொலைவில் நின்று கொண்டிருந்த ஓநாய், "ஆட்டுக் குட்டியே!" என்று உறுமியது.

ஆட்டுக்குட்டி பயந்து நடுநடுங்கியது. தண்ணீர் குடிக்கவில்லை.

"தண்ணீரை ஏன் கலக்குகிறாய்?" என்று கேட்டது ஓநாய்.

"நான் கலக்கவில்லையே, ஓரமாய் நின்று தான் பருகுகிறேன்" என்று நடுங்கிக் கொண்டே கூறியது ஆட்டுக்குட்டி.

"அது சரி! போன வருடம் என்னை ஏன் திட்டிப் பேசினாய்?" என்று அதட்டியது ஓநாய்.

"ஐயோ நான் பிறந்தே ஏழு மாதங்கள் தானே ஆகின்றன!" என்றது ஆட்டுக்குட்டி.

"நீ திட்டவில்லை என்றால், உன் தாய் திட்டியிருக்கலாம் அல்லது உன் தந்தை திட்டியிருக்கலாம்?" என்றது ஓநாய்.

என் பெற்றோர் யாருக்குமே தீங்கு செய்ய மாட்டார்கள் என்று பணிவோடு கூறியது ஆட்டுக் குட்டி

"இல்லை என்றால், உன் இனத்தார் எவரேனும் திட்டியிருக்கலாம், அது உனக்கு எப்படி தெரியும்? அதற்கு

இப்போது நீ தான் பலி!" என்று கூறி ஆட்டுக்குட்டிமீது பாய்ந்து கொன்று தின்றது அந்த ஓநாய்

ஆட்டுக்குட்டிக்குப் பரிந்து பேச எவரும் இல்லை

*எளியோரை வலியோர் அழிப்பது இயல்பே!*

# 4

# ஏட்டிக்குப் போட்டி

ஒரு ஊரில் கணவனும் மனைவியும் வாழ்ந்து வந்தனர்.

அவன் ஒரு துணிக் கடையில் வேலை செய்து வந்தான்.

அவன் மனைவி குணக்கேடானவள். கணவன் ஏதாவது சொன்னால், அதற்கு மறுப்புக் கூறுவது அவள் வழக்கம்.

அவனும் அவளுக்குப் பதில் சொல்லாமல், மௌனமாகவே இருந்து விடுவான்.

அவனுடைய தாய் இறந்து போய், ஒரு வருடம் ஆகிறது. மறுநாள் அந்த நினைவு நாளைக் கருதி நெருங்கிய உறவினர்களை அழைத்து உணவு அளிப்பது, அவனுடைய சமூக வழக்கம்.

அதைச் செய்ய வேண்டும் என்பது அவனுடைய விருப்பம்.

மனைவியிடம் அதைச் சொன்னால், அவள் மறுத்து விடுவாளே என்று வருத்தப்பட்டுக் கொண்டே கடையிலிருந்து வீட்டுக்கு வந்து கொண்டிருந்தான்.

வரும் வழியில், அவனுடைய பள்ளி ஆசிரியர் எதிரே வந்தார். "உன் முகம் வாட்டமாய் காணப்படுகிறதே, என்ன விஷயம்?" என்று கேட்டார்.

“ஐயா, என் தாய் இறந்து ஒரு வருடம் ஆகிறது. அந்த நினைவு நாளுக்கு, உறவினர்களை அழைத்து உணவு அளிக்க வேண்டும்; அதைச் சொன்னால், என் மனைவி செய்ய மறுத்து விடுவாளே என்ற கவலை எனக்கு” என்றான் அவன்.

“இதற்காக ஏன் கவலைப்படுகிறாய்? நான் சொல்கிறபடி, உன் மனைவியிடம் சொல்லு. உன் விருப்பம் போல் நினைவுநாள் நடைபெறும்” என்று கூறி, ஒரு யோசனை சொல்லி விட்டுச் சென்றார்.

அவன் ஆறுதலோடு வீட்டுக்கு வந்தான். மனைவியிடம், “என் தாயின் முதல் நினைவுநாள் நாளைக்கு. சமூக வழக்கப்படி உறவினர்களை அழைத்து உணவு அளிக்க வேண்டாம். நாம் இருவரும், அப்பளம், வடை, பாயசத்தோடு சாப்பிடுவோம்” என்றான் அவன்.

உடனே அவன் மனைவி, “உங்களுக்கு ஏன் புத்தி இப்படிக் கெட்டுப் போய் விட்டது! பெற்ற தாயின் நினைவுநாளை ஒட்டி உறவினர்களை அழைத்து உணவு அளிப்பதே மதிப்பு. அதைச் செய்யாமல், இருந்தால் உறவினர்கள் நம்மை ஏளனமாக நினைப்பார்கள் என்று கூறி, வேண்டிய பொருள்களை அவளே சென்று வாங்கினாள். உறவினர்களை அழைத்தாள், அப்பளம், வடை, பாயசத்துடன் விருந்து நடத்தி விட்டாள்.

கணவனுக்கு தன் விருப்பம் நிறைவேறியதில் மகிழ்ச்சி தாளவில்லை. அதன் பின், எந்தக் காரியம் நடைபெற வேண்டும் என்று நினைக்கிறானோ அதை வேண்டாம் என்று எதிரிடையாகவே கூறுவான். ஆனால், அவள் அதை நிறைவேற்றி விடுவாள்.

*ஆசிரியர் சொல்லிக் கொடுத்த யோசனை இதுதான்!*

# 5

# சாமர்த்தியமான சோதிடன்

ஒரு சிற்றூரில் ஆனந்தன் என்பவன், தன் மனைவியோடும், இரண்டு குழந்தைகளோடும் வாழ்ந்து கொண்டிருந்தான்.

அவன் கைவசம் இருந்த பணமும், நகையும் செலவழிந்தது; வேலை எதுவும் கிடைக்கவில்லை, சில நாட்கள் பட்டினி கிடக்கவும் நேரிட்டது.

மனைவி, மக்களோடு ஊர் ஊராக அலைந்தான் ஆனந்தன்.

அடுத்த ஊரில் இருக்கும் செல்வந்தன் ஆண்டான் செட்டி வீட்டுக்கு வேலை பார்க்க ஒரு பெண் தேவை என்பதை கேள்விப்பட்டான் ஆனந்தன்

தன் மனைவியையும் குழந்தைகளையும் ஆண்டான் செட்டி வீட்டில் வேலை செய்யும்படி ஏற்பாடு செய்தான்.

சிறிது தொலைவில் உள்ள வணிகனிடம் கணக்கனாக வேலை பார்த்து, அங்கேயே ஒரு அறையில் த்ங்கினான் ஆனந்தன்.

சில நாட்களுக்குப் பிறகு, ஆண்டான் செட்டி மகளுக்கு திருமணம் வெகு விமர்சையாக நடைபெற்றது.

திருமணத்திற்குச் சென்று நல்ல உணவு அருந்தலாம் என்று மிக ஆவலோடு இருந்தான் ஆனந்தன். ஆனால், அவனை அழைக்கவில்லை. சிறிது வருத்தம் உண்டாயிற்று, ஆயினும், தன் மனைவி மக்களாவது திருமண விருந்து உண்டதில் அவனுக்கு மகிழ்ச்சி அளித்தது.

அடுத்த நாள் ஆனந்தனின் மனைவி அவனைக் காண வந்தாள்.

'நாம் ஏழை என்பதால் தானே செட்டி மகள் திருமணத்திற்கு தன்னை அழைக்கவில்லை என்று மனைவியிடம் வருத்தப்பட்டான் ஆனந்தன்.

மனைவி புறப்படத் தயாரானாள்.

அப்பொழுது, "எனக்கு ஒரு புதுயோசனை தோன்றியுள்ளது. செக்குமாடுபோல், கணக்கு வேலை பார்த்து எப்படி முன்னேற முடியும்? ஏதேனும், ஒரு தந்திரத்தைக் கையாண்டால் தான் மதிப்போடு, பணமும் சம்பாதிக்க முடியும். செட்டி வீட்டுக்கு பலர் வருவார்கள். பேச்சுவாக்கில், என் கணவர் ஞான திரு டி மூலம் சோதிடம் கூறுவார். தெய்வீக சக்தி பெற்றவர் என்று சொல்லு" என்றான். "உங்களுக்குச் சோதிடம் தெரியாதே, பொய் சொல்லலாமா?" என்றாள் அவன் மனைவி.

"பொய் சொல்லி ஏமாற்ற மாட்டேன்; தந்திரம்! அது ஒரு வகையான சாமர்த்தியம்" என்றான் ஆனந்தன்,

செட்டி வீட்டுக்கு ஆனந்தன் மனைவி சென்றாள்.

மறுநாள், செட்டி வீட்டில் ஒரே பரபரப்பு. திருமணத்திற்கு மாப்பிள்ளை வந்த குதிரை காணாமல் போய்விட்டது. எங்கே தேடியும் குதிரை போன சுவடே தெரியவில்லை.

அப்போது, "என் கணவர் தெய்வீக அருள் பெற்ற சோதிடர், காணாமல் போன குதிரையைப் பற்றி, அவரிடம் கேட்டால், ஞானதிரு டி மூலம் சொல்லக் கூடியவர்" என்று செட்டியிடம் ஆனந்தன் மனைவி சொன்னாள்.

உடனே செட்டி, ஆனந்தனைத் தேடிச் சென்று வேலை மிகுதியால், திருமணத்திற்கு உங்களை அழைக்க மறந்து விட்டேன். மன்னிக்க வேண்டும் என்று கூறி, "குதிரை காணாமல் போய் விட்டது, அது கிடைக்க வழி செய்ய வேண்டும்" என்று பணிவோடு வேண்டிக் கொண்டான்.

அதைக் கேட்டதும், கரும்பலகையில், என்னவோ கணக்குப் போட்டு, கண்ணை மூடிக் கொண்டு, வாய்க்குள், முணுமுணுத்து "செட்டியாரே! நேராக தெற்கே போனால், ஊருக்கு வெளியே, பாழடைந்த ஒரு சத்திரம் காணப்படும், திருடர்கள் அதில் குதிரையை மறைத்து வைத்திருப்பதாகத் தெரிகிறது" என்றான் ஆனந்தன்.

செட்டி சில ஆட்களோடு அந்தச் சத்திரத்திற்குச் சென்றான்.

ஆனந்தன் கூறியபடி அங்கே குதிரை மறைவாகக் கட்டப்பட்டிருந்தது. மகிழ்ச்சியோடு, அதை ஓட்டி வந்தனர்.

செட்டி அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை. ஆனந்தனுக்கு நிறைய பணம் கொடுத்தான். அவனுடைய சோதிடத்தின் பெருமையைப் பலரிடம் சொன்னான். அவன் மதிப்பும், புகழும் ஊர் முழுதும் பரவியது.

ஆனால், குதிரையை முதல் நாள் இரவில் திருடிக் கொண்டு போய் சத்திரத்தில் கட்டிவைத்தவன் ஆனந்தனே என்பது எவருக்குமே தெரியாது.

# 6

# விவசாயி அடைந்த வருத்தம்

கிராமத்திலிருந்து ஒரு விவசாயி நகரத்துக்கு வந்தான். பசி எடுத்தது அவனுக்கு ஒரு சிற்றுண்டி விடுதிக்குச் சென்று, ஒரு தோசை கொண்டு வரச் சொல்லி, சாப்பிட்டான், பசி அடங்க வில்லை. மேலும், ஒரு தோசை கொண்டுவரச் சொல்லி, அதையும் சாப்பிட்டான் அப்பொழுதும் அவன் வயிறு நிறைய வில்லை. மூன்றாவது தடவை, ஒரு தோசை வரவழைத்து அதையும் சாப்பிட்டான். பசி அடங்கவில்லை.

பிறகு ஒரு மசால் வடையைக் கொண்டு வரச் சொல்லி, அதைச் சாப்பிட்டதும் பசி அடங்கியது.

அப்பொழுது அந்த விவசாயி தன் தலையில் அடித்துக் கொண்டு, “என்னைப் போல் மூடன் எங்கேயாவது இருப்பானா? மூன்று தோசைகளையும் வாங்கிச் சாப்பிட்டு, காசை வீணாக்கிவிட்டேனே! முதலிலேயே ஒரு மசால் வடையை வாங்கித் தின்றிருந்தால், பசி அடங்கியிருக்குமே” என்று மனம் வருந்தினான்.

# 7

# ஆபத்து வேளையில் உதவியவர் யார்?

ஒரு சிறிய நகரத்தில் அந்தணர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் பலருக்குக் கல்வி கற்றுக் கொடுத்து, அதனால் கிடைக்கும் பொருளில் வாழ்க்கை நடத்தினார்.

அவருக்கு இரண்டு மகன்கள். மூத்தவன் சோமன். இளையவன் காமன்.

மூத்தவன் சோமன், உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற வேறுபாடு இல்லாமல், அனைவரையும் சமமாகக் கருதி பழகுவது அவன் வழக்கம்.

இளையவன் கல்வியில் ஆர்வம் கொண்டிருந்தான். கல்வி போதித்து வந்தான் அந்தணரான தந்தை இறக்கவே, இருந்த சிறிது நிலத்தை அண்ணனும் தம்பியும் பகிர்ந்து கொண்டனர்.

மூத்தவனான சோமன் விவசாயத்தில் ஈடுபட்டு உழைக்கலானான். ஒரு நாள், சோமன் தாழ்த்தப்பட்ட இனத்து இளைஞர்களோடு உற்சாகமாகப் பேசிக் கொண்டிருந்தான்.

அதைக் கண்டு வெறுப்படைந்த அந்தணப் பெரியவர் ஒருவர், சோமனிடம் "நீ அந்தண குலத்தில் பிறந்தவன் அல்லவா? தாழ்த்தப்பட்ட இனத்தவர்களுடன் பழகலாமா?" என்று கண்டித்து அவனை ஏசினார்.

பெரியவரின் பேச்சு அவனுக்குக் கோபத்தைத் தூண்டியது, "கடவுளின் படைப்பில் உயர்வு தாழ்வு எப்படி இருக்க முடியும்? பிறப்பு என்பது எல்லோருக்கும் சமம். அதில் வேறுபாடு காண்பது முட்டாள்தனமானது. மேலும், அந்த தாழ்த்தப்பட்ட இனத்தவர், உழுது பயிர் செய்து தருவதைத்தானே அனைவரும் சாப்பிடுகிறோம். அதில் வேறுபாடு காண்கிறோமா? மக்களின் பிறப்பில் உயர்வு தாழ்வு கற்பிப்பது முட்டாள் தனமானது." என்று கூறினான்.

பெரியவர் பேசாமல் சென்று விட்டார்.

சில நாட்களுக்குப் பிறகு, அந்த அந்தணப் பெரியவர் சாலையில் சென்று கொண்டிருந்த போது, மயக்கமுற்றுக் கீழே விழுந்துவிட்டார். அதைப் பார்த்த தாழ்த்தப்பட்ட இனத்தவன் ஒருவன், ஓடி வந்து, அவர் முகத்தில் தண்ணீர் தெளித்து, சிறிது தண்ணீர் குடிக்கச் செய்து, அருகில் இருந்த, தன் குடிசைக்குத் தூக்கிச் சென்று மயக்கத்தை தெளியவைத்து உதவினான்.

பெரியவர் எழுந்து புறப்படும் போது எதிர்பாராமல் அங்கே வந்த சோமன், "அந்தணப் பெரியவரே! மயக்கமுற்று கீழே விழுந்த உங்களைக் காப்பாற்றி உயிர்பிழைக்கச் செய்தவன் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவன் என்பதை நினைத்துப் பாருங்கள் உங்கள் இனத்தவர் வரும்வரை காத்திருந்தால் நீங்கள் செத்துப் போயிருப்பீர்கள்" என்று இடித்துக் காட்டினான். பெரியவர் தலைகவிழ்ந்து, எதுவும் பேசாமல் நடக்கலானார்.

# 8

# பொதுஅறிவு இல்லாதவன்

ஒரு ஊரில் ஒரு பண்ணையார் இருந்தார். அவருக்குச் சொத்துக்கள் ஏராளமாக இருந்தன.

பண்ணையாருக்கு ஒரே ஒரு பெண்தான்! ஆனால், அந்தப் பெண் ஆணைப் போலவே வளர்ந்தாள். கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்றாள். மேலும், கலை, இலக்கியம், இசை ஆகிய வற்றிலும் ஈடுபாடு கொண்டிருந்தாள்.

பெண்ணுக்குத் தகுந்த மாப்பிள்ளை தேட முயற்சி எடுத்தார் பண்ணையார்.

வரக் கூடிய மாப்பிள்ளை தன் வீட்டோடு இருக்கக் கூடியவனாகப் பார்த்தார்.

பல மாதங்களாக, பல ஊர்களில் பார்த்தும், எதுவும் பொருத்தமாக அமையவில்லை. எவனுமே மாமனார் வீட்டில் தங்கும் மாப்பிள்ளையாக வர விரும்பவில்லை.

பக்கத்தூரில் பையன் ஒருவன் இருந்தான். அவனுக்கு தாய், தகப்பன் இல்லை. கல்லூரியில் படிக்க வசதி இல்லை. சிற்றப்பன் வீட்டில் தங்கி இருந்தான். அவன் வேலை தேடியும், விண்ணப்பம் போட்டுக் கொண்டும் இருந்தான்.

பண்ணையார் அவனைப் பற்றி விசாரித்தார். 'அவன் ஏழையாக இருந்தாலும், பரவாயில்லை, அவனையே ஏற்பாடு செய்து, பெண்ணை திருமணம் செய்து கொடுத்து அவனை வீட்டோடு வைத்துக் கொள்ளலாம்'' என்று சிலர் கூறினார்கள்.

அந்த ஏழை இளைஞனுக்கு தன் பெண்ணை திருமணம் செய்து வைத்தார் பண்ணையார்.

அந்த இளைஞனும் மாமனார் வீட்டில், மனைவி சொல்வதைக் கேட்டுக் கொண்டு அமைதியாக இருந்து வந்தான்.

பண்ணையார் காசிக்கு யாத்திரை சென்றார்.

ஒரு நாள், பாடகர் ஒருவர், தம் குழுவினருடன் பண்ணையார் வீட்டுக்கு வந்தார். "ஊர்தோறும், செல்வந்தர் வீடுகளில் பாடுவது வழக்கம்". என்றார்.

"பண்ணையார் யாத்திரை சென்றுள்ளார், எனக்கு இசையில் விருப்பம் இல்லை. நீங்கள் பண்ணையார் வந்த பிறகு வரலாம்" என்றார் மாப்பிள்ளை.

பாடகர் வருத்தத்தோடு, புறப்படத் தயாரானார்.

அப்போது குளித்து விட்டு வந்த பண்ணையார் மகள், வந்தவர் யார் எதற்காக வந்தார்?" என்று கேட்டாள்.

"பாடகராம், பாடினால், சன்மானம் பெறலாம் என்று வந்தார், பண்ணையார் யாத்திரை போயிருக்கிறார். அவர் வந்த பிறகு வரலாம் என்று கூறி அனுப்பினேன்" என்றான் மாப்பிள்ளை.

"நம்பிக்கையோடு வந்தவரை வெறுமனே போகச் சொல்வது முறையல்ல,என்று கூறி, பாடகரை வரவழைத்து இசை நிகழ்ச்சி நடத்தும்படி ஏற்பாடு செய்தாள் பண்ணையார் மகள்.

"எனக்கு இசையே தெரியாது, நான் எப்படி சபையில் இருந்து ரசிப்பது?" என்றான் மாப்பிள்ளை.

"அதை நான் கவனித்துக் கொள்கிறேன்" என்று கூறிவிட்டு, அவன் குடுமியில் ஒரு நூலைக் கட்டி, அதை தன்கையில் பிடித்துக் கொண்டு, பின்வரிசையில் அவள் இருந்தாள்.

பாடகர் பாடத் தொடங்கினார். உள்ளூர் மக்கள் கூடி இருந்தனர்.

பாடகர் உற்சாகமாகப் பாடிக் கொண்டிருந்தார்.

பாட்டுக்கு ஏற்றப்படி நூலை ஆட்டிக் கொண்டிருந்தாள் பண்ணையார் மகள்.

அவ்வப்போது, மாப்பிள்ளையின் தலை அசைந்து ஆடியது.

'மாப்பிள்ளை நல்ல ரசிகராக இருக்கிறாரே' என்று பாடகர் நினைத்து, மேலும் சிறப்பாகப் பாடிக் கொண்டிருந்தார்.

திடீரென்று பாடகரைப் பார்த்து, "உம்முடைய பாட்டை நிறுத்தும்!" என்றார் மாப்பிள்ளை.

பாடகர் திடுக்கிட்டார். பாட்டில் – ராகத்தில் ஏதேனும் தவறு நேர்ந்து விட்டதோ என்று குழப்பத்தில் ஆழ்ந்து, பாட்டை நிறுத்தி விட்டு, மாப்பிள்ளையைப் பார்த்தார்.

"என் குடுமியில் கட்டியிருந்த நூல் அறுந்து விட்டது!" என்றான் மாப்பிள்ளை.

பாடகர் உள்பட அனைவருக்கும் சிரிப்புத் தாங்க முடியவில்லை.

அதன்பின் ஒரு பாடகரைக் கொண்டு, மாப்பிள்ளைக்கு இசைப்பயிற்சி கற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்தனர்.

*ஏழையாக இருப்பது குற்றம் இல்லை, ஆனால் முட்டாளாக இருக்கக் கூடாது.*

# 9

# உயிரைக் காப்பாற்றிய கை

ஒரு ஊரில் பள்ளி ஆசிரியையாக இருந்தார் ஒரு பெண்மணி. அவளுடைய வலது கை முழுங்கையிலிருந்து விரல்கள் வரை வெண்மையும், கருமையும் கலந்து பார்ப்பதற்கு அருவருப்பாக இருந்தது.

ஒரு நாள் அந்த ஆசிரியையின் மகள் எட்டு வயதுச் சிறுமி, 'அம்மா! நீ அழகாக இருக்கிறாய். ஆனால், உன்னுடைய வலதுகை பார்ப்பதற்கு விகாரமாய் இருக்கிறதே ஏன்?" என்று கேட்டாள்.

"அருமை மகளே! ஒரு பொருள் அல்லது உடல் உறுப்பு எவ்வாறு பயன்படுகிறது என்பதைக் கொண்டே அதன் அழகையும், விகாரத்தையும் மதிப்பிடவேண்டும்" என்றாள் தாய்.

"எனக்குப் புரிய வில்லை; புரியும்படி சொல்" என்று கேட்டாள் சிறுமி.

"நீ கைக் குழந்தையாக இருந்தபோது, தொட்டிலில் தூங்கிக் கொண்டு இருந்தாய். திடீரென்று, ஒரு நாள் நம் வீட்டில் தீப்பற்றி எரிந்தது அடுத்த வீட்டுக்காரர்கள் 'குழந்தை, குழந்தை' என்று கத்தினார்களே தவிர, ஒருவரும் வீட்டினுள் சென்று, குழந்தையைக் காப்பாற்றத் துணியவில்லை.

"என் உயிரைப் பற்றி கவலை கொள்ளாமல், உள்ளே ஓடி, தொட்டியில் கிடந்த உன்னை தூக்கிக் கொண்டு வெளியேறும் போது, தீக்கொள்ளி ஒன்று என் வலதுகையில் விழுந்துவிட்டது. அது பொக்களமாகி, வெண்மையும், கருமையுமாக இப்படி ஆகிவிட்டது.

"இந்தக் கை ஒரு உயிரைக் காப்பாற்றியதே என்ற நினைப்பில் வெண்மை, கருமை விகாரம் எதுவும் எனக்குத் தோன்ற வில்லை" என்றாள் தாய்.

"அம்மா! என்னைக் காப்பாற்றிய இந்தக் கை எப்படி இருந்தால் என்ன?" என்று தாயின் கையை முத்தமிட்டாள் சிறுமி.

# 10

# ஆசை அழிவை உண்டாக்கும்

தெருப் புழுதியில் புரண்டு, புரண்டு எழுந்து காள் காள் என்று கத்தியது ஒரு கழுதை.

சிறிது தொலைவில் புற்களில் இருந்த வெட்டுக்கிளிகள் கிரீச் கிரீச் என்று ஒலித்தன.

அந்த ஒலியைக் கேட்ட கழுதை, வெட்டுக் கிளியின் அருகில் சென்றது .

"உன் குரல் மிக இனிமையாக இருக்கிறதே! உனக்கு இந்தக் குரல் எப்படி உண்டாயிற்று? உன்னைப் போல் இனிமையான குரல் உண்டாக, எனக்கு ஒரு வழி சொல்லு" என்று கேட்டது கழுதை.

வெட்டுக்கிளிக்குச் சிரிப்புத் தாங்க முடியவில்லை. "என்னைப் போல் இனிமையான குரல் உனக்கு அமைய வேண்டுமானால், நான் அருந்துவதைப் போல், பனித்துளிகளையே அருந்த வேண்டும் வேறு எந்த உணவையும் தின்னக் கூடாது" என்றது வெட்டுக்கிளி.

கிளி சொன்னதை நம்பியது கழுதை. எப்படியாவது, இனிய குரலை அடைய வேண்டும் என்று ஆசைப்பட்டது.

வழக்கமான உணவுகளை உண்ணாமல், பனித்துளிகளை மட்டுமே அருந்தத் தொடங்கியது.

கழுதையின் உடல் மெலிந்தது, நடை தளர்ந்தது. சோர்வு மிகுதியாயிற்று. ஆனாலும் பனித்துளிகளையே விடாமல் அருந்தி வந்தது.

கழுதையால் எழுந்திருக்க முடியவில்லை. ஆனாலும் இனிய குரல் ஆசை மட்டும் அதை விட்டு அகலவில்லை.

சில நாட்களில் அந்த மடக் கழுதை செத்துப் போய்விட்டது. அதைக் கண்ட கிளி ஏளனமாக கிரீச் கிரீச் என்று ஒலித்தது.

*பிறரைப் பார்த்து பொறாமை கொள்ளக் கூடாது.*

# 11

# குடியானவனின் மனக்கோட்டை

குடியானவன் ஒருவன், வெள்ளரிக் காயைத் திருடுவதற்காக ஒரு தோட்டத்துக்குச் சென்றான். 'ஒரு மூட்டை வெள்ளரிக் காய்களைப் பறித்துக் கொண்டு போய் விற்றால் பணம் கிடைக்கும். கிடைத்த பணத்திற்கு கோழி வாங்குவேன். என்று அவன் கற்பனை செய்தான். மேலும், அவன் யோசனை செய்யலானான்; கோழி, முட்டைகள் இடும். அவைகளை அடை காக்கும். குஞ்சுகள் பொறிக்கும். கூட்டம் கூட்டமாக குஞ்சுகளை வளர்ப்பேன்.

பிறகு, அந்தக் குஞ்சுகளை விற்று ஒரு பன்றி வாங்குவேன். பன்றி குட்டிகள் போடும் அந்தக் குட்டிகளை விற்று குதிரை வாங்குவேன். குதிரையும் குட்டிகளை ஈனும். அவைகளை வளர்த்து விற்றால், ஏராளமாகப் பணம் கிடைக்கும்.

அந்தப் பணத்தைக் கொண்டு ஒரு வீடும் அத்துடன் ஒரு தோட்டமும் வாங்குவேன்.

அந்தத் தோட்டத்தில் வெள்ளரிக் காய்களை பயிரிடுவேன். "வெள்ளரிக்காய்களை எவரும் திருடாதபடி காவலுக்கு ஏற்பாடு" செய்வேன்.

“முரட்டுக் காவல்காரன் ஒருவனை நியமிப்பேன். அடிக்கடி நானும் தோட்டத்திற்குச் சென்று, “யாரடா அங்கே? எச்சரிக்கை!” என்று உரக்கக் கூவுவேன்!’

குடியானவன் இவ்வாறு யோசனை செய்து கொண்டிருந்ததில், தன்னையே மறந்து விட்டான்.

தான் வேறு ஒருவனுடைய தோட்டத்தில் நிற்பதும் அவனுக்கு நினைவில்லை.

மன மகிழ்ச்சியினால், அவன் கடைசியாக எண்ணியபடி உரத்த குரலில், “யாரடா அங்கே எச்சரிக்கை!” என்ற கூறி விட்டான்.

தோட்டத்தில், வேற்று ஆள் குரல் கேட்கவே, காவல்காரன் ஓடி வந்து, குடியானவனைப் பிடித்து, நையப் புடைத்து அனுப்பினான்.

# 12

## நிலத்தில் கிடைத்த மோதிரம்

ஒரு பண்ணையாருக்குச் சொந்தமான நிலத்தில் கூலிக்காக ஒரு ஏழை உழுது பயிரிட்டு வந்தான்.

வழக்கம் போல் விவசாயி உழுது கொண்டிருக்கும் போது, ஒரு தங்க மோதிரத்தைக் கண்டு எடுத்தான்.

வேலை முடிந்ததும் வீட்டுக்கு வந்து விட்டான், தான் கண்டு எடுத்த மோதிரத்தை தன் மனைவியிடம் காட்டினான்.

அதைப் பார்த்ததும் அவன் மனைவி, தனக்குக் காதோலை செய்து போட்டுக் கொள்ள ஆசைப்பட்டாள்.

“நிலம் பண்ணையாருடையது, நான் கூலிக்காகவே

உழுகிறேன்; நிலத்தில் கிடைப்பது அவரைச் சேர்ந்தது. நாம் எடுத்துக் கொள்வது அவருக்குத் துரோகம் செய்வதாகும் என்றான் அவன்.

கணவன் கூறியது மனைவிக்குத் திருப்தி அளிக்கவில்லை.

"பண்ணையாருக்கு எப்படி தெரியும்? அவர் வந்து பார்த்தாரா?" என்று வாதாடினாள் மனைவி. இருவருக்கும் இரவு முழுதும் தூக்கம் வரவில்லை.

"பண்ணையார் வந்து பார்க்க வில்லை தான். ஆனாலும், என் மனச்சாட்சி உறுத்துகிறது" என்று கூறிவிட்டு, காலையில் எழுந்து பண்ணையாரிடம் சென்று, மோதிரத்தைக் கொடுத்து விவரத்தைக் கூறினான் அவன்.

பண்ணையார், விவசாயியின் நேர்மையைப் பாராட்டி, அதை அவனுக்கே பரிசாகக் கொடுத்து விட்டார்.

# 13

## காக்கையின் பகுத்தறிவு

ஒருவன் தன் வீட்டுத் திண்ணையில் இருந்து கொண்டு, பகல் உணவைச் சுவைத்து சாப்பிட்டுக் கொண்டிருந்தான்.

அப்போது ஒரு காக்கை, சற்று தள்ளி நின்று அவனைப் பார்த்துக் கொண்டிருந்தது.

அவனோ வயிறு புடைக்கச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான்.

அவனுடைய எச்சில் இலைக்கு காத்துக் கிடக்கிறது காக்கை

அவன் கையைக் கூட அசைக்கவில்லை.

காக்கை பொறுமை இழந்து, "ஏ, மனிதனே! நீ உண்ணும்

உணவில் ஒரு பிடி அள்ளி வீசக் கூடாதா?" என்று ஏக்கத்துடன் கேட்டது.

"ஏ, மடக் காகமே! உனக்குமா பசி? விடியற்காலையில் எழுந்திருக்கும் சுறுசுறுப்பை உன்னிடமிருந்து தானே நான் கற்றுக் கொண்டேன். உன் பசியை தீர்த்துக் கொள்ள உனக்கு வழி தெரியவில்லையா?" என்று கேட்டான் அவன்.

"நீ தான் அதற்கான ஒரு வழியைக் கூறக் கூடாதா?" என்று கேட்டது காகம்.

"இதற்குத் தான் பகுத்தறிவு வேண்டும் என்பது." என்றான். அவன் அருகில் இருந்த ஒரு சொம்பு தண்ணீரை எடுத்து மடமட என்று குடிக்கத் தொடங்கினான் அவன்.

சமயம் பார்த்திருந்த காகம், அவனுடைய இலையிலிருந்து உணவைத் தூக்கிக் கொண்டு வேகமாகப் பறந்து போயிற்று

# 14

# பணக்காரனுக்குத் தூக்கம் வருமா?

பல தொழில்களை நடத்திக் கொண்டிருந்தார் ஒரு செல்வந்தர்.

ஒரு நாள் நள்ளிரவு. அனைவரும் ஆழ்ந்து தூங்கிக் கொண்டிருந்தனர்.

சகல உயிரினங்களும் கூட தூக்கத்தில் மூழ்கிக் கிடந்தன. ஊரே அமைதியாகக் காணப்படுகிறது.

ஆனால், செல்வந்தருக்கோ தூக்கம் வரவில்லை. மாடியில் உலாவிக் கொண்டிருந்தார். சிறிது தொலைவில், திண்ணையில்

ஒருவன் கையைத் தலைக்கு வைத்துக் கொண்டு நிம்மதியாக உறங்கிக் கொண்டிருந்தான்.

அதைப்பார்த்த செல்வந்தர் நம்மால் அப்படி தூங்க முடியவில்லையே என எண்ணி ஏங்கினார்.

காவலாளியை அனுப்பி, திண்ணையில் தூங்கிக் கொண்டு இருப்பவனை எழுப்பி அழைத்து வரச் சொன்னார் செல்வந்தார்.

காவலாளி சென்று அவனை எழுப்பினான். "இந்த நேரத்தில் ஏன் என்னை எழுப்பித் தொல்லைப் படுத்துகிறாய்?" என்று கேட்டான்.

"அருகில் உள்ள மாளிகையின் முதலாளி, உன்னை அழைத்து வரச் சொன்னார்." என்றான் காவலாளி.

"என் தூக்கம் கெட்டு விடும். காலையில் வருகிறேன்." என்றான் அவன்.

"உன்னை கூட்டிக் கொண்டு போகவில்லையானால், என் வேலை போய்விடும்" என்று கெஞ்சி அவனை கூட்டிக் கொண்டு சென்றான் காவலாளி.

வந்தவனைப் பார்த்து, "வெறுமனே தரையில் ஆழ்ந்து தூங்குகிறாயே, அது எப்படி? நானோ பஞ்சணை, பட்டு மெத்தை, மின் விசிறி, இவற்றோடு படுத்தும் எனக்குத் தூக்கம் வரவில்லையே, அதைத் தெரிந்து கொள்ளவே உன்னைக் கூட்டி வரச் சொன்னேன்" என்றார் செல்வந்தார்.

"ஐயா, நீங்கள் பணக்கார வர்க்கம். மேலும், மேலும் பணத்தைச் சம்பாதிப்பது எப்படி என்ற சிந்தனையிலேயே மூழ்கிக் கிடக்கிறீர்கள். தவிர வாழ்க்கையில் உங்களுக்கு எல்லாம் மனநிறைவு என்பதே கிடையாது. நாங்களோ உழைப்பாளி வர்க்கம்.

நாங்கள் குறிப்பிட்ட நேரம் வரை உழைக்கிறோம். கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு, வயிற்றுப் பசியைத் தீர்த்துக் கொள்கிறோம், நாளைய வேலையை நாளை பார்ப்போம்' என்று எண்ணி, இரவில் அமைதியாகத் தூங்குகிறோம். போதும் என்ற மனநிறைவோடு, மகிழ்ச்சியோடு தூங்கி எழுந்திருக்கிறோம். எதற்காகவும் கவலைப்படுவதில்லை" என்று கூறிவிட்டு, உடனே அவன் புறப்பட்டான்.

செல்வந்தர் அவன் கூறியதைக் கேட்டு பிரமித்துப் போனார்.

*'போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து' என்று கூறுவர்.*

# 15

## அற்பப் புத்தி உடையவன்

சில ஆண்டுகளாக, ஒரு அரசனுக்கு குழந்தை பிறக்கவில்லை. மற்றொரு அரச குடும்பத்திலிருந்து ஒரு பெண்ணை திருமணம் செய்து கொள்ளும்படி அமைச்சர்கள் முதலானோர் ஆலோசனை கூறினர். ஆனால், அரசன் அதை ஏற்க மறுத்து விட்டான்.

சில மாதங்களுக்குப் பிறகு, அரசனுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. நாடு முழுவதும் மகிழ்ச்சியாக விழா கொண்டாடியது.

குழந்தை பிறந்த மகிழ்ச்சியின் நினைவாக, அரண்மனையில் பணிபுரிவோர் அனைவருக்கும் வேட்டி, துண்டு, புடவை முதலியவற்றை வழங்குமாறு உத்திரவிட்டான் அரசன்.

எல்லோரும் மகிழ்ச்சியோடு வேட்டி, துண்டு, புடவையோடு வீட்டுக்குத் திரும்பி வந்தனர்.

அவர்களில் ஒருவன் மட்டும் மிகுந்த மகிழ்ச்சியோடு துள்ளிக் குதித்து ஓடிவந்தான்.

“ஏன் இப்படி துள்ளிக் குதித்து ஓடி வருகிறாய்?” என்று வழியில் அவனைப் பார்த்து ஒருவன் கேட்டான்.

“அரண்மனையில் எனக்கு இரண்டு வேட்டி, இரண்டு துண்டு கொடுத்தார்கள்” என்றான்.

“கையில் ஒரு வேட்டி, ஒரு துண்டுதானே வைத்திருக்கிறாய்?” என்று கேட்டான் அவன்.

“என் பக்கத்து வீட்டில் இருக்கும் ராகவனுக்குக் கொடுக்க வில்லை. அதனால், எனக்கு இரண்டு கொடுத்ததாகத் தானே எண்ண வேண்டும்” என்றான் அவன்.

அடுத்த வீட்டுக்காரனுக்குக் கிடைக்கவில்லை என்பதில் இவனுக்கு இரட்டிப்பு மகிழ்ச்சி.

*சிலர் இப்படி அற்ப சந்தோஷம் கொள்வார்கள்.*

# 16

# அறிவிப்புப் பலகை இருக்கக் கூடாதா?

ஒரு கிராமத்தில் ஒரு குளம் இருந்தது. குளத்தில் தண்ணீரில் நச்சுத்தன்மை பரவியிருப்பதாக தெரிய வந்தது.

அதனால், ஊராட்சி மன்றத்தினர். “இந்தக் குளத்தில் இறங்கினால் ஆபத்து” என்று ஒரு அறிவிப்புப் பலகையை தொங்க விட்டிருந்தனர்.

பல மாதங்களுக்குப் பிறகு, அந்த அறிவிப்புப் பலகையை ஊராட்சி மன்றத்தினர் எடுத்துவிட்டனர்.

அந்தக் கிராமத்து விவசாயி ஒருவர், ஊராட்சி மன்ற அதிகாரியிடம், "குளத்தில் தொங்க விட்டிருந்த அறிவிப்புப் பலகையை ஏன் எடுத்து விட்டீர்கள், ஆபத்து நீங்கிவிட்டதா?" என்று கேட்டார்.

"அந்தக் குளத்தில் யாரும் இறங்கவில்லை, ஒரு ஆபத்தும் உண்டாகவில்லை. அதனால், அந்தப் பலகையை அகற்றி விட்டோம்" என்று பதில் அளித்தார் ஊராட்சி மன்ற அதிகாரி.

*ஆபத்து ஏற்படவில்லை என்பதற்காக அறிவிப்புப் பலகையை அகற்றி விடுவது நியாயமா? அரசு ஊழியர்களின் புத்தி விபரீதமானது.*

# 17

# எதையும் எளிதில் மாற்ற முடியுமா?

ஒரு அரசன் தன்னுடைய நாட்டு மக்கள் கடைப்பிடித்து வரும் பழக்கங்களும், நடைமுறைகளும் நாகரீகம் இல்லாமல், இருப்பதாக வெறுப்படைந்தான். அவற்றை எல்லாம் மாற்றி அமைத்து, புதுமையான பழக்கங்களை புகுத்த விரும்பினான். அரசன் ஒரு நாள் அமைச்சர்களைக் கூட்டிவைத்து, "ஒரு குழுவினர் முன்னேறிய நாடுகளுக்குச் சென்று அவர்களுடைய பழக்கங்கள், நாகரீகங்கள் முதலானவற்றை அறிந்து வந்து, நம்முடைய நாட்டில், அவற்றை எளிதாக நிறைவேற்றலாம் என்று நினைக்கிறேன் உங்கள் கருத்து என்ன?" என்று கேட்டான்.

அரசன் கூறியதை அமைச்சர்களும், அதிகாரிகளும் ஆமோதித்துக் பாராட்டினார்கள்.

அரசன் கூறியதைப் பாராட்டாமலும், பதில் கூறாமலும் ஒரு அமைச்சன் மௌனமாக இருந்தான்.

அவனைப் பார்த்து, "என் திட்டத்தில் உமக்கு விருப்பம் இல்லையா?" என்று கேட்டான் அரசன்.

ஒரு வெள்ளைத் தாளை எடுத்து, அதை இரண்டாக, மூன்றாக மடித்தான். அதைப் பலமுறை விரல்களால் அழுத்தி, பிறகு நகத்தால் தேய்த்து, அதை அரசனிடம் நீட்டினான் அந்த அமைச்சன்.

"அரசே! நீங்கள் எதையும் சாதிக்கக் கூடிய வல்லமை உங்களுக்கு உண்டு. உங்கள் எதிரில் எந்த எதிர்ப்பும் நிற்காமல் மறைந்து விடும் என்பதை எல்லோரும் அறிவார்கள். ஆகையால், நான் காட்டிய தாளில் உள்ள மடிப்பை, அதில் அடையாளமே தெரியாதபடி, செய்ய முடியுமா பாருங்கள்." என்றான் அந்த அமைச்சன்.

அதைக் கேட்ட அரசன் தாளை வாங்கிப் பார்த்து சிந்திக்கலானான்.

இரத்தத்தில் பரம்பரையாய் ஊறிப்போன, மனத்தில் ஆழப் பதிந்த எதையும் அவ்வளவு எளிதில் மாற்றிவிட முடியாது. என்பதை உணர்ந்தான்.

*படிப்படியாகத்தான் மாற்றம் உண்டாகும்.*

# 18

# கடவுள் வேற்றுமை காட்டுவாரா?

ஒரு கிராமத்தில், ஒரு சமயம் காலரா நோய் பரவியது.

சிலர் மருத்துவமனைக்குச் சென்றனர். சிலர் இறந்து போனார்கள்.

அந்த ஊரில் இருந்த பண்ணையார் பயந்து, பட்டணத்துக்குச் செல்லத் தீர்மானித்தார்.

அதற்காக வண்டிக்காரனை அழைத்து, இரட்டை மாட்டு வண்டியைக் கொண்டு வரும்படி சொன்னார்.

வண்டிக்காரன், சமையல்காரனிடம், "நீயும் வருகிறாயா?" என்று கேட்டான்.

"பண்ணையார் காலராவிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக இந்தக் கிராமத்தை விட்டுப் புறப்படுவதை நினைத்தால், அவருடைய கடவுள் கிராமத்தில் வசிக்காமல், பட்டணத்தில் வசிப்பதாகத் தோன்றுகிறது. என்னுடைய கடவுள் இங்கேயே தான் வசிக்கிறார்" என்றான் சமையல்காரன்.

"ஆமாம், உண்மைதான்! கடவுள் இருப்பாரானால், எல்லா இடங்களிலும் தானே இருப்பார். கிராமத்தில் இருந்தாலும் காப்பாற்றத்தானே செய்வார். ஏழை பணக்காரன், கிராமம், பட்டணம் என்ற பாகுபாடு காட்டினால், அவர் எப்படி கடவுளாக இருக்க முடியும்?" என்றான் வண்டிக்காரன்.

# 19

# தாத்தாவை திணறச் செய்தான்

பெரியவர் ஒருவர் தம் பேரனுடன் கொஞ்சிப் பேசிக் கொண்டிருந்தார். அவனுக்கு வயது ஆறு!

"தாத்தா! என்னிடம் உங்களுக்குப் பிரியம் உண்டு அல்லவா?" என்று கேட்டான் பேரன்.

"ஆம். உன்னிடம் எனக்கு உள்ள பிரியத்துக்கு அளவே இல்லை" என்றார் தாத்தா.

"தாத்தா! அப்படியானால் கடவுளிடமும் பிரியம் வைத்திருக்கிறீர்கள் அல்லவா?" என்று கேட்டான். சிறுவன்

“ஆம். கடவுளிடமும் எனக்கு அளவற்ற பிரியம் உண்டு” என்றார்.

பேரன் உடனே “தாத்தா! அது எப்படி முடியும்? உங்களுக்கு மனம் (உள்ளம்) ஒன்று தானே இருக்கிறது? என்றான்.

தாத்தா திணறிப் போனார். “உலகப் பற்றுள்ள மனத்தில் கடவுள் பற்று எப்படி இருக்க முடியும்?” என்று நினைக்கலானார்.

*ஒரே மனம், இரண்டு பேர்களிடம் எப்படி பிரியம் வைக்க முடியும்?*

# 20

## தவறு யாருடையது?

அரசாங்கத்தில் பணிபுரிந்து ஓய்வு பெற்ற அதிகாரி ஒருவர் தன்னுடைய அறையில் இருந்து எதையோ எழுதிக் கொண்டிருந்தார்.

அப்போது, பாலைக் கொண்டு வந்து அவர் மேஜைமீது வைத்து விட்டுச் சென்றார் அவருடைய மனைவி.

அதிகாரி அதைக் கவனிக்காமல் எழுதிக் கொண்டிருந்தார்.

அப்பொழுது, கல்லூரியில் படிக்கும் அவர்களுடைய மகள் ஏதோ ஒரு புத்தகத்தை எடுப்பதற்குச் சென்றாள்.

மேஜைமீது இருந்த பால் குவளையில் அவள் கைபட்டு, பால் கொட்டிப் போயிற்று.

உடனே அந்தப் பெண், “அப்பா! என்னை மன்னித்து விடுங்கள், தவறுதலாக என் கைபட்டு, பால் கொட்டிவிட்டது” என்றாள்.

"அம்மா! உன் தவறு அல்ல, உன் தாய் பாலைக் கொண்டு ந்து வைத்ததுமே, அதை எடுத்து நான் குடித்திருக்க வேண்டும புப்போதே குடிக்காதது என் தவறு" என்றார் அதிகாரி.

அதைக் கேட்டுக் கொண்டிருந்த அதிகாரியின் மனைவி ந்து, "உங்கள் இருவர்மீதும் தவறு இல்லை, நீங்கள் எழுதிக் காண்டிருக்கும் போது நான் கொண்டு வந்து பாலை வைத்தது ன் தவறு" என்றாள்.

ஒவ்வொருவரும் தங்கள் தவறை உணர்ந்தது உள்ளத்தை நெகிழச் செய்தது.

*தவறை உணர்வது எவ்வளவு நேர்மை!*

# 21

## தங்கையின் பரிவு

அக்காளும் தங்கையும் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தனர்.

அவர்கள் இருவருக்கும் அடிக்கடி சண்டை உண்டாகும்.

ஒரு நாள் இருவருக்கும் சச்சரவு அதிகமாயிற்று. அப்பொழுது தங்கையின் தலைமயிரைப் பிடித்து இழுத்து அடி அடி என்று லமாக அடித்து விட்டாள் அக்காள்.

அதை அறிந்த பெற்றோர் அவளைத் திட்டி, ஒரு அறையில் தள்ளி, பூட்டி வைத்தனர், மேலும்,அவளுக்குப் பகல் உணவு அளிக்காமல் பட்டினி போட வேண்டும் என்று தீர்மானித்தனர்.

அன்றைய தினம் ஞாயிற்றுக் கிழமை. அப்பளம், வடை, பாயசத்துடன் எல்லோரும் வயிறு நிறைய உண்டு மகிழ்ந்தனர்.

அக்காள் பட்டினியாக கிடப்பாளே என்று இரக்கப்பட்டு, பெற்றோருக்குத் தெரியாமல், உணவை எடுத்துச் சென்றாள் தங்கை.

தூங்கிக் கொண்டிருந்தவளை எழுப்பி, சாப்பிடச் செய்தாள்.

தங்கை தன்னிடம் கொண்டிருந்த அன்பையும், தான் அவளிடம் நடந்து கொண்ட மூர்க்கத் தனத்தையும் உணர்ந்தாள். அவள் கண்களில் நீர்மல்கியது.

'இனி, உன்னோடு ஒரு போதும் சண்டையிட மாட்டேன், இது உறுதி!" என்றாள் அக்காள்.

*ரத்த பாசம் என்பது இதுதான்!*

# 22

# முதலாளி சொல்லாத வழி

பம்பாயில் வியாபாரம் செய்யும் ஒரு பணக்காரர், தன்னுடைய கிராமத்திலிருந்து வீட்டுவேலைக்காக, ஒரு இளைஞனை பம்பாய்க்குக் கூட்டிச் சென்றார்.

அவனுக்கு தன் கிராமத்தைத் தவிர வேறு ஊர் எதுவும் தெரியாது. அவனுக்கு எழுதப் படிக்கத் தெரியாது.

பம்பாய் சென்றதும் அவனிடம், "அடே! இது பெரிய நகரம்; கார்கள், ஸ்கூட்டர்கள், டிராம், பஸ்கள் நிறைய போய்க் கொண்டும், வந்து கொண்டும் இருக்கும். கடைகளுக்குப் போகும் போது, மிகவும் கவனமாகப் போய் வரவேண்டும். இடது பக்கம் கார், ஸ்கூட்டர் முதலியன வந்தால், வலது பக்கம் போக வேண்டும், வலது பக்கம் கார் முதலியன வந்தால், இடது பக்கம் போக வேண்டும்" என்று சொன்னார் வியாபாரி.

அவனும் கவனமாகக் கேட்டுக் கொண்டான்

ஒரு வாரத்திற்குப் பிறகு ஒருநாள் காலையில், வியாபாரி வீட்டுக்கு ஒரு காவலர் வந்து உங்கள் "வேலைக்காரன் கார்

விபத்துக்கு உள்ளாகி, மருத்துவமனையில் சேர்க்கப் பட்டிருக்கிறான்'' என்று தெரிவித்தார்.

வியாபாரி உடனே மருத்துவ மனைக்குச் சென்று, அவனைப் பார்த்து ஆறுதல் கூறினார். ''நான் சொன்னபடி நீ நடந்து கொண்டிருந்தால், இப்படி விபத்துக்கு ஆளாகி இருக்கமாட்டாயே'' என்றார்.

படுக்கையில் படுத்திருந்த வேலைக்காரன், ''முதலாளி! நீங்கள் சொல்லியபடி நடந்து கொண்டதால் தான் இப்படி விபத்து நடந்தது. இடதுபக்கம் ஒரு கார் வந்தது, வலது பக்கமும் ஒரு கார் வந்தது, நான் நடுவில் சென்றேன்'' என்றான்.

*முதலாளி சொல்லாத வழியில் அவன் சென்றான் போலும்*

# 23

## பணத்தைச் சேமித்தது எப்படி?

பெரியவர் ஒருவர் தன் மகனுக்குத் திருமணம் செய்து வைத்தார்.

அவனுக்கு வருவாய் கிடைக்க வழியையும் ஏற்படுத்தி, தனிக் குடித்தனம் அமைத்து கொடுத்தார்.

அவ்வப்போது வந்து மகனைப் பார்த்துச் செல்வார் தந்தை

ஒரு நாள் தந்தை வந்திருந்தார். இரவு நேரம், தந்தையும் மகனும் பேசிக் கொண்டிருந்தனர்.

''அப்பா! நீங்கள் எப்படி பணத்தைச் சேர்த்தீர்கள்? என்னுடைய வருமானத்துடன், உங்களுடைய உதவி இருந்தும், எனக்கு ஒவ்வொரு மாதமும் பற்றாக்குறை இருந்து கொண்டே இருக்கிறதே, ஏன்?'' என்று கேட்டான் மகன்.

“மகனே! எதுவும் பழக்கத்தால் வருவது. வாழ்க்கையில் மிகவும் கவனம் தேவை. அவசியமான செலவு எது, அவசியம் இல்லாத செலவு எது என்பதை முதலில் தீர்மானித்துக் கொள்ள வேண்டும்; ஆடம்பரமான உடைகள், சினிமா – நாடகம், சிற்றுண்டி விடுதிக்குச் செல்லுதல் ஆகியவற்றை நான் தவிர்த்து வந்துள்ளேன்.

வீட்டில் வெளிச்சத்துக்கு ஒரு விளக்கே போதும் என்றால், எதற்காக மற்றொரு விளக்கை எரிய விடவேண்டும்” என்று சொல்லிவிட்டு எழுந்தார்.

உடனே மகன் எழுந்து, தேவையின்றி, எரிந்து கொண்டிருந்த மற்றொரு விளக்கை அணைத்தான்.

# 24

## எது கிடைத்தாலும் மகிழ்ச்சியே!

ஒரு சிறிய நாட்டை சிற்றரசன் ஒருவன் ஆட்சி செய்து வந்தான்.

தத்தன் என்ற காவலாளி, அரண்மனையில் வாயில் காப்போனாகப் பணிபுரிந்து வந்தான். அவன் அரசனிடம் மிகுந்த விசுவாசம் கொண்டிருந்தான்.

அரசனைக் கொல்ல வந்த சில் ஒற்றர்களை அவன் மிகவும் துணிவுடன் விரட்டி, அடித்திருக்கிறான், சிலரைக் குத்திக் கொன்று, அரசனைக் காப்பாற்றி யிருக்கிறான்.

அவனுடைய ராஜவிசுவாசத்தை அறிந்த அரசன், அவனுடைய ஏழ்மை நிலையைப் போக்கக் கருதினான்.

ஒரு நாள், பாத்திரம் நிறைய பொன்னும் மணியும் போட்டு, அதை இறுக மூடி, காவலாளி வீட்டுக்குச் செல்லும் போது, அவனுக்குப் பரிசாகக் கொடுத்தான் அரசன்.

அதைப் பெற்றுக் கொண்டு காவலாளி வீட்டுக்குச் செல்லும்போது, ஒரு துறவி ஒரு பொன்னைக் கொடுத்துவிட்டு, அவனிடமிருந்த பாத்திரத்தைப் பெற்றுக் கொண்டான்.

பாத்திரத்தில் இருந்தது என்ன என்பது அவனுக்குத் தெரியாததால், ஒரு பொன்னை பெரிதாக நினைத்து மகிழ்ந்தான்.

அந்தப் பாத்திரத்தை துறவி அரசனிடம் கொண்டுபோய்க் கொடுத்து இனாம் பெற்றுச் சென்றான்.

மறுநாளும், ஒரு பாத்திரத்தில் சில பொருள்களை வைத்து மூடி காவலாளி தத்தனிடம் கொடுத்தான் அரசன்.

அதையும் அரசாங்க ஊழியன் ஒருவன், இரண்டு பொன்களைக் கொடுத்து அவனிடமிருந்து பெற்றுக் கொண்டு சென்றான்.

அதைக் கொண்டு போய் அவன் அரசனிடம் கொடுத்து இனாம் பெற்றான்.

மூன்றாம் நாளும், ஒரு பாத்திரத்தில் ஒரு முத்து மாலையை வைத்து காவலாளியிடம் கொடுத்தான் அரசன்.

மற்றொரு அரசாங்க ஊழியன் மூன்று பொன்னைக் கொடுத்து, காலவாளியிடமிருந்து பாத்திரத்தைப் பெற்றுக் கொண்டு சென்று, அரசனிடம் கொடுத்தான்.

காவலாளி தத்தனின் வறுமை நீங்கவில்லை என்பதையும், அவன் ஆசைப்படவில்லை என்பதையும் அரசன் உணர்ந்தான்.

மீண்டும் ஒரு பாத்திரத்தில் பொன்னும் பொருளும் வைத்து,

தத்தனுக்குக் கொடுத்தான். அவன் அரசனை வணங்கி, அதை வாங்கும் போது, பாத்திரத்தின் மூடிதிறந்து, அதில் உள்ள பொன்னும் பொருளும் கீழே விழுந்தன.

அப்போது தான் காவலாளி தத்தனுக்கு உண்மை தெரிய வந்தது.

அரசன் மூன்று தடவை கொடுத்த பாத்திரங்களை தன்னுடைய வறுமைப் புத்தியினால் 'என்ன இருக்கிறது' என்று பாராமல் அப்படியே, கொடுத்து விட்ட முட்டாள் தனத்தை நினைத்து, தன்னை நொந்து கொண்டான் தத்தன்.

இம்முறை பாத்திரம் தத்தனிடம் சேர்ந்தது. அதில் உள்ளதை அவன் உணரச் செய்ததை எண்ணி அரசன் மகிழ்ந்தான். மனநிறைவு பெற்றான்.

*வறுமையில் வாடுபவன் கிடைத்தது போதும் என்று நினைப்பான்.*

# 25

# பெரிய வாயாடி

ஒரு ஊரில் ஒரு பிராமணரும் அவர் மனைவியும் வாழ்ந்து வந்தனர். மிகவும் ஏழ்மையான நிலையில் இருந்தனர்.

அவர் புரோகிதர் வேலைக்குச் செல்வார். அந்த வேலை கிடைக்காத போது, சமையல் வேலை பார்ப்பதும் உண்டு.

அவர்களுக்கு குழந்தை இல்லை

அவருடைய மனைவி பெரிய வாயாடி, யாரிடமாவது ஏதேனும் பேசி, வம்பளத்து கொண்டிருப்பாள். அதனால் அவளுடன் யாருமே பேசுவது இல்லை.

கணவனும் மனைவியும் அந்த ஊரிலிருந்து அடுத்த ஊருக்கு வந்து சேர்ந்தனர்.

அவளுடைய குணத்தை தெரிந்து கொண்டதால், அடுத்த வீட்டில் வசிப்பவர்கள், எதிர் வீட்டில் இருப்போர் எவருமே அவளுடன் பேசுவதே இல்லை. இரண்டு, மூன்று மாதங்களில் அந்த ஊர் அவளுக்குப் பிடிக்க வில்லை.

"வேறு ஊருக்குப் போவோம்" என்றாள் கணவனிடம். "இந்த ஊருக்கு வந்து இரண்டு மூன்று மாதங்கள் தானே ஆகிறது, எதற்காக வேறு ஊருக்குப் போக வேண்டும்" என்றார் அவர்.

"இந்த ஊருக்கு வந்ததிலிருந்து ஒருவரும் பேசுவது இல்லை. ஒரு சண்டையும் கிடையாது, எனக்குப் பொழுது போகவில்லை" என்று சலிப்படைந்தாள்.

மூட்டை முடிச்சுகளை கட்டிக் கொண்டு இருவரும் புறப்படத் தயாரானார்கள். திண்ணையில் உட்கார்ந்தனர். சிறிது நேரம் கழித்து, மூட்டையை எடுத்து தலையில் வைத்தார் அவர். அப்போது, எதிர்வீட்டில் இருந்தவள், அவர்களின் மூட்டை முடிச்சுகளைப் பார்த்ததும். "தொலைந்தது சனியன்" என்றாள்.

அவள் சொன்னது அவள் காதில் விழுந்தது.

"வந்தது சண்டை, மூட்டையைக் கீழே வையும்" என்றாள் அவள்.

*"ஊருடன் கூடி வாழ்" என்பது பழமொழி.*

# 26

## கோயில் கட்டிவைத்த பலன்

இந்திர மோகன் என்னும் அரசன் ஒரு நகரத்தை ஆட்சி செய்தான்.

தனக்குப் புகழ் உண்டாக வேண்டும் என்பதற்காக, அந்த நகரத்தின் எல்லையில், நதிக்கு அருகில், ஒரு கோயிலைக் கட்டிவைத்தான்.

கோயில் உண்டானதும், அந்த நதி பெருமை பெற்றது. அந்த நதியில் குளித்துவிட்டு, கோயிலுக்குச் சென்று வழிபாடு செய்தால், மிகவும் புண்ணியம் கிடைக்கும் என்று மக்கள் நம்பத் தொடங்கினார்கள்.

நாள்தோறும் நகர மக்களும், பயணிகளும் அந்த நதிக்கு வந்து குளிப்பதும், கோயிலில் வழிபடுவதும் அதிகரித்தன. அரசனும் அந்த நதியில் குளிப்பதற்குத் தினமும் வந்தான்.

ஒரு நாள் அந்த நகரத்துப் பெண் ஒருத்தி நதிக்கு வந்தாள்.

அவள் மிக அழகானவள். அவளுடைய அழகை எவராலும் வர்ணித்துக் கூற இயலாது.

வழக்கம் போல் நதிக்கு வந்த அரசன், அந்த அழகியைக் கண்டு உள்ளத்தைப் பறி கொடுத்தான். தன் நிலையை மறந்தான்.

அந்த அழகியின் வீட்டை அறிந்து, இரவு வேளையில் அந்தப் பெண்ணரசி வீட்டை அடைந்தான் அரசன். அவளிடம் மோகம் கொண்டு காமப் பார்வை பார்த்தான்.

அரசனுடைய கெட்ட எண்ணத்தை அவள் புரிந்து கொண்டாள்.

அரசன் இப்படி தன்னை நாடி வருவான் என்று அவள் நினைக்கவே இல்லை.

அரசன் அவளை நெருங்கி வருமுன், "அரசே! என் கணவர் வியாபாரம் செய்ய அடுத்த ஊருக்குச் சென்றுள்ளார். யாரும் இல்லாத அநாதையாக இப்போது நான் இருக்கிறேன். குடிமக்களுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டிய தாங்கள் தகாத முறையில் நடந்து கொள்ளும் எண்ணத்தைக் கை விடுங்கள்." என்று கெஞ்சி, அவனைக் கையெடுத்து வணங்கினாள்.

அவளுடைய வேண்டுதல் எதுவும், அரசன் காதில் ஏறவில்லை. அவன் தன் எண்ணத்தைக் கைவிடவில்லை என்பதை அறிந்தாள்.

"வேறு ஒருவன் மனைவியை தாங்கள் இச்சிப்பது பெரும் அநீதி, நீங்கள் பலாத்காரமாக என்னைக் கெடுக்க முயன்றீர்கள் ஆனால், அந்தப் பாவம் உங்களை விடாது. நான் அவமானப்பட்டு உயிர் வாழ விரும்பாமல், என் உயிரை மாய்த்துக் கொள்வேன்" என்று படபடப்போடு எச்சரித்தாள்.

அவள் என்ன சொல்லியும் அரசனுடைய எண்ணம் மாறாமல், அவளைப் பலாத்காரம் செய்ய முற்பட்டான்.

அப்போது, அருகில் கிடந்த உருளைக் கட்டையை எடுத்து தன் நெஞ்சில் பலமுறை குத்திக் கொண்டு, அதிர்ச்சியால் மனம் உடைந்து இறந்து போனாள்.

அதைக் கண்டு அதிர்ச்சி அடைந்த அரசன், வெட்கமும் பீதியும் அடைந்து விரைவாக அரண்மனையை நோக்கிச் சென்றான்.

அந்த அழகிக்கு தன்னால் ஏற்பட்ட மரணத்தை நினைத்தான்; மனச்சாட்சி அவனை உறுத்தியது. அன்று இரவே அரசனின் உயிர் போய்விட்டது.

*மனச்சாட்சி மிகவும் உறுத்தும் என்பது இக்கதையின் கருத்து*

# 27

## அன்பு வழியே சிறந்தது

தட்சசீலம் என்ற நாட்டை கலிங்கதத்தன் என்ற அரசன் ஆட்சி செய்து வந்தான். அவன் புத்தமதத்தைத் தழுவியவன்.

புத்த மதமே உலகில் சிறந்தது என்ற கருத்தோடு மிகுந்த பற்றுதல் கொண்டு, அந்த மார்க்கத்தின் குருமார்களில் ஒருவனாக விளங்கி வந்தான்.

அந்த நகரத்தில் விசாகன் என்ற செல்வந்தன் பெரிய வணிகனாக இருந்தான். அவனும் புத்த மதத்தைச் சேர்ந்தவன். அவனுக்கு இரத்தினம் என்ற பெயருடைய மகன் ஒருவன் இருந்தான்.

இளைஞனான அவனுக்கு தன் தந்தை பின்பற்றும் புத்த மதத்தில் வெறுப்புக் கொண்டவன். அதனால் புத்த மதத்தையும் தன் தந்தையையும் எப்பொழுதும் இகழ்ந்து பேசிக் கொண்டு இருந்தான்.

ஒரு நாள், “தந்தையே! பழமையான வேதங்களை உடைய நம்முடைய இந்து மதத்தை மறந்து விட்டீர்கள். அந்தணர்களை வெறுத்து, மற்றவர்களை மதித்து வருகிறீர்கள். புத்த மதக் கொள்கைகளை பெரிதாக மதித்துப் போற்றிப் புகழ்கின்றீர்கள், கீழ் மக்களுக்கு அடைக்கலம் தரும் இருப்பிடம் புத்த மதம். பிராமணீயச் சடங்குகளை மறுப்பதே அதன் கொள்கை. அருள் நெறி மறந்து, இந்து மதத்துக்குத் துரோகம் விளைவிக்கிறீர்கள்.” என்று பலவாறு உரக்கப் பேசலானான் விசாகனின் மகன் இரத்தினம்.

தந்தை விசாகன், மகனுக்கு பல கருத்துக்களை எடுத்துக் கூறி, சமாதானப்படுத்த முயன்றான்.

“உலகம் முழுவதும் பரவித் தழுவும் புத்த மதத்திற்கும், இதர

மதத்திற்கும் வேறுபாடு தெரியவில்லையா? புத்த மதம் காமகுரோத பாவங்களை வெறுக்கிறது, உறவினருடன் காரணம் இல்லாத சச்சரவுகளை விரும்பவில்லை. அனைத்து உயிர்களுக்கும் பாதுகாப்பு அளித்து, அன்புவழி ஒன்றையே நிலைநிறுத்தக் கூடிய தாயகமான புத்த மதத்தை, அவமதித்துப் பேசாதே. ஜீவகாருண் யத்தை உயிர்நாடியாகக் கொண்டது அது. உயர்ந்த கோட்பாடு களைக் கொண்டது புத்த மதம். மரண பயத்தை ஒழிப்பதோடு, உயிர் வதைகளையும் தடுக்கிறது". என்று பலவாறு கூறினான்.

இளைஞனாகிய உனக்கு அறிவு வளர்ச்சி போதாது. உனக்குத் தெரிந்ததோ கடுகு அளவு, தெரிய வேண்டியதோ கடல் அளவு. ஆகையால், உன்னுடைய அற்ப அறிவைக் கொண்டு எதையும் மதிப்பிடும் தகுதி உனக்கு இருப்பதாக எண்ணுவது அறிவீனம்." என்று மேலும் விளக்கிக் கூறினான்.

என்ன சொல்லியும் அவன் புரிந்து கொள்ளாமல், வெறுப்பே அவனிடம் மிகுதியாகக் காணப்பட்டது.

அதனால் வெறுப்படைந்த விசாகன் வேதனையோடு அரசனிடம் சென்று, தன் மகனின் போக்கைப் பற்றிக் கூறினான்.

அரசன், இரத்தினத்தை அழைத்து வரச் செய்து, அவன் ஒரு மதவெறுப்பாளன், நாட்டின் நயவஞ்சகன் என்று குற்றம் சாட்டி, அவனுக்கு மரண தண்டனை விதித்தான்.

மகனுக்கு விதிக்கப்பட்ட மரணதண்டனையைக் கேட்டதும் விசாகன் அதிர்ச்சி அடைந்தான். தன்னுடைய ஒரே மகனான அவனுக்குக் கருணை காட்டுமாறு அரசனிடம் மன்றாடினான்.

விசாகனின் கோரிக்கையை ஏற்று, சிறிது கருணைகாட்டி, மரணதண்டனையை மூன்று மாதங்களுக்குத் தள்ளி வைத்து. அதுவரை அவனை விசாகன் பொறுப்பில் வைத்துக் கொண்டு

அதன்பின், தன்முன் கொண்டு வந்து நிறுத்துமாறு உத்தர விட்டான் அரசன்.

தன்தந்தையுடன் வீட்டுக்குச் சென்ற இரத்தினம், உண்ணாமலும், உறங்காமலும் கலக்கம் அடைந்தான்.

மேலும், மரணபயம் அவனைச் சூழ்ந்தது. துடியாய்த் துடிக்கலானான். ஏக்கத்தால் உடல் மெலிந்தது; உள்ளம் வெதும்பி நோய் வாய்ப்பட்டான்.

அரசன் அளித்திருந்த மூன்று மாதக் கெடு தீர்ந்தது.

மறுநாள், அரசன்முன் வந்து இரத்தினம் நின்றான்.

அவனைப் பார்த்து, "ஏன் இப்படி எலும்பும் தோலுமாய் இளைத்து விட்டாய்? உண்ணாதே, உறங்காதே என்று நான் கட்டளை இடவில்லையே?" என்றான் அரசன்

"மரணம் என்னை நெருங்கிக் கொண்டிருக்கும் போது, உண்பதிலும், உறங்குவதிலும் மனம் செல்லவில்லை" என்றான் இரத்தினம்

அரசன் பலமாகச் சிரித்தான். "இரத்தினா! ஒவ்வொரு ஜீவராசிக்கும் உயிர் எவ்வளவு உத்தமமானது என்பதை இப்பொழுதாவது உணர்ந்து கொண்டாயா? அந்த உயிர் வதைக்காக ஜீவகாருண்யம் காட்டும் கொள்கை எவ்வளவு உயர்வானது என்பதை உணர்கிறாயா? மற்றும், மரண பயம் எவ்வளவு கவலை அளிக்கக் கூடியது, என்பதையும் அனுபவித்து விட்டாய். இத்தகைய மரண பயத்திலிருந்து தெளிவடையக் கூடிய வழியைக் காட்டும் புத்த மதக் கொள்கைகள் எத்தகைய சிறப்பு உடையவை என்பதை எண்ணிப்பார்! புத்த மதத்தில் நம்பிக்கை கொண்டு முக்தி அடைய வழிபடுவாயாக!" என்றான்.

"அரசே! நான் குற்றம் நீங்கியவனாகி விட்டேன். வீடுபேறு அடைவதில் எனக்கு ஆவல் உண்டாகிறது, அதைப் பற்றி

அறிவுரை அருள வேண்டிக் கொள்கிறேன்'' என்று வேண்டிக் கொண்டான் இரத்தினம்.

அதைக் கேட்டதும் அரசன் புன்முறுவலுடன், ஒரு சட்டி நிறைய எண்ணெய் கொண்டு வந்து இரத்தினத்திடம் கொடுக்கும் படி உத்தரவிட்டான்.

''இரத்தினா! இதோ உன் கையில் உள்ள சட்டியின் விளிம்பு வரையில், எண்ணெய் உள்ளது. அதைக் கையில் ஏந்தியபடியே, இந்த நகரத்தைச் சுற்றி வரவேண்டும். ஒரு துளிகூட கீழே சிந்தக் கூடாது, சிந்தினால், வாள் ஏந்தி உன்னுடன் வருகின்ற சிப்பாய்கள் அந்த இடத்திலேயே, உன்னைக் கொன்று விடுவார்கள்'' என கட்டளையிட்டான் அரசன்.

உருவிய வாளுடன் சிப்பாய்கள் பின் தொடர்ந்து வர, இரத்தினம் மிகவும் கவனத்தோடு எண்ணெய்ச் சட்டியை ஏந்தி, ஒரு துளி எண்ணெய் கூட சிந்தாமல், நகரம் முழுவதையும் சுற்றி வந்து, அரசன் முன் நின்றான்.

''இரத்தினா! நகரத்தைச் சுற்றி வந்ததில், ஏதேனும் சிறப்பைக் கண்டாயா?'' என்று கேட்டான் அரசன்.

''அரசே! எண்ணெய் சிந்திவிடக் கூடாதே என்ற கவனத்தில், சிந்தினால் உயிர் போய் விடுமே என்ற அச்சத்தினால், எந்தப் பகுதியிலும், என் கண்களுக்கு எதுவுமே தென்படவில்லை. மனதை எதுவும் கவரவும் இல்லை'' என்றான் அவன்.

''இப்பொழுது தெரிந்து கொண்டாயா? ஒரே உறுதியான எண்ணத்தால் அருகில் உள்ளவற்றை நீ மறந்தாயே. அந்த ஒரு எண்ணமே தியானம் என்பது. அத்தகைய சிந்தனை சிதறாத தியானத்தில் இருப்பவன் உலக ஆசைகளிலும் பந்தங்களிலும் மீண்டும் சிக்கிக் கொள்வதில்லை.'' என்றான் அரசன்.

அறிவுரையும், அறஉரையும் உணர்த்திய அரசனின் அன்பு வழியைக் கேட்ட இரத்தினம், அருள்வழி எது என்பதை தெரிந்து கொண்டான்.

மகனின் அருள்வழி நோக்கை அறிந்து மகிழ்ச்சி அடைந்தான் விசாகன்.

*இக்கதை சிறுவர் சிறுமியர்க்கு சற்று கடினமாக இருக்கலாம். என்றாலும், இப்பொழுதே தெரிந்து கொள்வது நல்லது தானே*

# 28

# செத்த எலியால் வியாபாரி ஆனான்

சிறிய நகரம் ஒன்றில் இளைஞன் ஒருவன் இருந்தான். அவன் பத்தாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தபோது, அவன் பெற்றோர் இறந்து விட்டனர். உறவினர் எவரும் இல்லை. குடியிருக்க சிறிய வீடு மட்டும் இருந்தது. வேலையும் கிடைக்க வில்லை. ஏதாவது வியாபாரம் செய்யலாம் என்றால், பணமும் இல்லை.

அவனிடம் அனுதாபம் கொண்ட ஒருவர், ஒரு யோசனை கூறினார்: "பக்கத்து ஊரில், ஒரு செட்டியார் இருக்கிறார். வியாபாரம் செய்யக் கடன் கொடுப்பார். பிறகு, வட்டியோடு அசலையும் சேர்த்துக் கொடுக்க வேண்டும். அவரிடம் சென்று கேட்டுப் பார்" என்று கூறினார்.

மறுநாள் மிகுந்த உற்சாகத்தோடு செட்டியாரைக் காணச் சென்றான் அந்த இளைஞன்.

அந்த நேரத்தில் செட்டியார், ஒருவனைக் கோபித்துக் கொண்டிருந்தார். அவன் செய்த வியாபாரத்தில் நஷ்டம் ஏற்பட்டதால், அசலும் வட்டியும் கொடுக்கவில்லை என்று பேச்சில் தெரியவந்தது.

மேலும், "முதலை இழக்கும்படியான வியாபாரத்தை எந்த முட்டாளாவது செய்வானா? திறமைசாலியாக இருந்தால், அங்கே கிடக்கும் செத்த எலியைக் கொண்டே பணம் சம்பாதித்து விடலாமே" என்று கடுமையாகப்பேசினார். அவனும் பிறகு வருவதாகக் கூறி போய் விட்டான்.

பிறகு செட்டியார், இளைஞனை ஒரு பார்வை பார்த்தார். "நீ எதற்காக வந்திருக்கிறாய்?" என்பது போலிருந்தது அவர் பார்வை.

இளைஞன் புத்திசாலித்தனமாக, "எனக்குக் கடன் எதுவும் வேண்டாம். அங்கே மூலையில் கிடக்கின்ற செத்த எலியைக் கொடுத்தால் போதும்" என்றான்.

"தாராளமாக எடுத்துச் செல்" என்றார் செட்டியார்.

இளைஞன், செத்த எலியை எடுத்துக் கொண்டு சென்றான்.

ஒரு கடலை வியாபாரி, தான் வளர்க்கும் பூனைக்கு இரை ஆகுமே என்று நினைத்து, செத்த எலியை வாங்கிக் கொண்டு ஒரு அழாக்கு கடலையைக் கொடுத்தான் இளைஞனுக்கு.

அதை வீட்டுக்குக் கொண்டுவந்து, வறுத்துப் பொட்டுக் கடலையாக்கினான். அதோடு, ஒரு குடத்தில், குடிதண்ணீர் எடுத்துக் கொண்டு போய் ஊருக்கு வெளியே மரத்தடியில் உட்கார்ந்தான்.

கடுமையான வெயிலில், விறகு வெட்டிக் கொண்டிருந்த விறகு வெட்டிகள் சிலர், களைப்புமிகுதியால், இளைப்பாற மரத்தடியில் அமர்ந்தனர்.

அவர்களுக்கு கொஞ்சம் கடலையும், ஒரு குவளை தண்ணீரும் கொடுத்தான்.

அவர்கள் மகிழ்ச்சியோடு, ஆளுக்குஇரண்டு விறகுக் கட்டைகளைப் கொடுத்து விட்டுச் சென்றனர்.

கிடைத்த விறகுக் கட்டைகளைச் சுமந்து சென்று, விறகுத் தொட்டியில் விற்றுப் பணம் பெற்றுச் சென்றான்.

இளைஞன் மீண்டும் அந்தப் பணத்துக்குக் கடலை வாங்கி, வறுத்து, அதையே தொடர்ந்து செய்து கொண்டிருந்தான்.

விறகு வெட்டிகள் பலரும் அவனுக்கு வாடிக்கையாளர்கள் ஆனார்கள்.

தினமும் அவனுக்குக் கிடைத்த விறகுகளில் ஒரு பகுதியை விற்று, மீதியை வீட்டில் சேமித்து வைக்கலானான். விறகுகள் வீட்டில் மலைபோல் குவிந்தன.

திடீரென்று அந்த ஊரில் அடைமழை பெய்யத் தொடங்கியது.

விறகுத் தொட்டிகளில் இருந்த விறகுகள் எல்லாம் தீர்ந்தன. விறகுக்குத் தட்டுப்பாடு ஏற்பட்டது. விலையும் அதிகமாகியது.

இளைஞன் தன் வீட்டில் சேமித்து வைத்திருந்த விறகுகள் அனைத்தையும் நல்ல நல்ல விலைக்கு விற்றதால், பணம் நிறையக் கிடைத்தது.

அந்தத் தொகையை மூலதனமாகக் கொண்டு, சிறிய வியாபாரம் ஒன்று தொடங்கினான் பிறகு, அது வளர்ந்து பெருகி, பெரிய வியாபாரி ஆனான்.

ஒரு நாள், யாரால் இந்த அளவுக்கு முன்னேறி, பணம் சம்பாதித்தோம் என்பதை நினைத்துப் பார்த்தான் இளைஞன்.

பிறகு, வெள்ளியினால் ஒரு எலி செய்து, அதை அந்தச் செட்டியாரிடம் கொண்டு போய்க் கொடுத்து வணங்கி நின்றான் இளைஞன்.

அதைப் பார்த்ததும் செட்டியாருக்கு ஒன்றும் புரியவில்லை.

இளைஞன், தான் முதன்முதலில் வந்து, செத்த எலியைக் கொண்டு சென்றது முதல் எல்லாவற்றையும் விவரமாகக் கூறினான்.

அவனுடைய ஊக்கத்தையும், உழைப்பையும், நாணயத்தையும் கண்டு செட்டியார் அவனைப் பாராட்டி மகிழ்ந்தார்.

அதன்பின், தன்னுடைய ஒரே மகளை, அந்த இளைஞனுக்குத் திருமணம் செய்து கொடுத்தார் செட்டியார்.

ஊக்கமும், உழைப்பும் தன்னம்பிக்கையும் இருந்தால், எப்படியும் முன்னேறலாம்.

# 29

## உண்மையான நண்பன்

ஒரு செல்வந்தர் வீட்டில் தெண்டன் என்பவன் காவலாளியாக வேலை பார்த்து வந்தான்.

தினமும் அவன் வீட்டுக்குத் திரும்பும் போது, மது அருந்தி வயிறு நிறையச் சாப்பிட்டு வருவான்.

அவன் மனைவி, "தினமும் இப்படிக் குடித்துவிட்டு, தின்னுவிட்டு வருகிறாயே? உன்னுடைய சம்பளம் இதற்கே போய் விட்டால், குடும்பத்தை எப்படி நடத்துவது?" என்று கடிந்து கொண்டாள்.

அதற்கு தெண்டன், "நான் வேலை செய்யும் வீட்டில், சிங்கன், வீரன் என இருவர் தோட்ட வேலை பார்க்கின்றனர். அவர்கள் இருவரும் என்னிடம் மிகுந்த பிரியம் உடையவர்கள். சிங்கன் எனக்கு மதுவும், உணவும் அளிப்பான். வீரனோ தன் உயிரையே கொடுக்கக் கூடியவன்." என்று கூறினான்.

சில நாட்களுக்குப் பிறகு, தெண்டனும் அவன் மனைவியும் சிங்கன் வீட்டுக்குச் சென்றனர். அவர்களை அவன் அன்போடு வரவேற்று, உபசரித்து, விருந்து அளித்து, அனுப்பி வைத்தான்.

அதன் பிறகு, வீரன் வீட்டுக்குச் சென்றனர். அப்போது வீரனும் அவன் மனைவியும் சூதாட்டத்தில் கவனமாக இருந்தனர். என்றாலும், சிறிது நேரம் அன்போடு பேசி, உணவு அளிக்காமல், அனுப்பி வைத்தனர். தெண்டன் மனைவிக்கு அவர்கள் உணவு அளிக்காதது வருத்தம் தந்தது.

"வீரன் உயிரையே கொடுக்கக் கூடியவன் என்று புகழ்ந்தாயே! என்று ஆத்திரப்பட்டாள் மனைவி. தெண்டன் அவளை சமாதானப்படுத்தினான்.

சில மாதங்களுக்குப் பின், தெண்டனும் மனைவியும் ஆலோசித்து நட்பைச் சோதிக்கத் தீர்மானித்தனர்.

தெண்டன் மனைவி மட்டும் சிங்கன் வீட்டுக்குச் சென்று, கவலை தோய்ந்த முகத்தோடு, "கணவனை, செல்வந்தர் வேலையிலிருந்து நீக்கி விட்டார்" என்று கூறினாள்.

"பணக்காரனை நாம் என்ன கேட்க முடியும்? ஏன் விலக்கினீர்கள் என்று கேட்க நமக்கு என்ன உரிமை இருக்கிறது? பணக்கார வர்க்கத்தாரிடம் வேலை செய்வது தலைக்குமேல் கத்தி தொங்குவது போன்றது. வேறு வேலை தேடிக் கொள்ளச் சொல்லு". என்று அவளிடம் கூறி, அவளை அனுப்பி வைத்தான் சிங்கன்.

அடுத்து, வீரன் வீட்டுக்குச் சென்று தன் கணவனை வேலையிலிருந்து நீக்கி விட்டதாக சொன்னாள் தெண்டன் மனைவி.

வீரன் மிகவும் கவலைப்பட்டு, "முதலாளி மற்றும் அவர் மனைவியிடம் மிகவும் பணிவோடு வேண்டி அவனுக்கு வேலை

மீண்டும் கிடைக்க முயற்சி எடுக்கிறேன், தைரியமாகப் போ, கவலை வேண்டாம்'' என்று ஆறுதல் கூறி அனுப்பினான்.

அப்பொழுது தான் வீரனின் நட்பின் உயர்வை அறிந்து மகிழ்ந்தாள் தெண்டனின் மனைவி.

*உண்மையான நண்பன், ஆறுதல் கூறி, ஆதரவு காட்டுவான்.*

# 30

## சிறப்பானவன் எவன்?

கடற்கரை அருகில், ஒரு சிற்றூரில் மீனவப் பெண் ஒருத்தி இருந்தாள். அவள் ஒரு அநாதை. மிகவும் அழகானவள்.

அவள் அழகில் மயங்கிய வாலிபர்கள் சிலர், அவளை திருமணம் செய்துகொள்ள விரும்பி, அவளைப் பின்தொடர்ந்து கொண்டிருந்தனர்.

அவள் தன் அழகினால் கர்வம் கொண்டு, 'எவன் சிறந்த மனிதனோ அவனையே மணப்பேன்' என்று உறுதி பூண்டிருந்தாள்.

ஒரு நாள் இளவரசன் ஒருவன் குதிரைமீது சவாரி செய்து எதிரே வந்தான்.

'இவனே சிறந்த மனிதன்' என்று கருதி, ஆவலோடு நின்றாள் அந்த மீனவப் பெண்.

அப்பொழுது துறவி ஒருவர் அங்கே வந்தார். உடனே இளவரசன் குதிரையை விட்டு இறங்கி, துறவியை வணங்கினான்.

'இளவரசனை விட, துறவியே சிறந்த மனிதன்' என்று நினைத்து துறவியைப் பின்தொடர்ந்து செல்லலானாள் மீனவப் பெண்.

சிறிது தூரம் சென்றதும், மரத்தடியில் இருந்த சிவலிங்கத்தை வணங்கிவிட்டுச் சென்றார் துறவி.

அதைப் பார்த்ததும் துறவியை விட, சிவலிங்கமே சிறந்தது என்ற எண்ணம் எழுந்தது அவளுக்கு.

அதன்பின், ஒரு நாய் ஓடிவந்து, அந்தச் சிவலிங்கத்தின் மீது சிறுநீர் கழித்துச் சென்றது.

சிவலிங்கத்தைவிட, நாயே சிறப்பாகத் தோன்றியது அவளுக்கு அதனால் நாயைத் தொடர்ந்து சென்றாள்.

பாழடைந்த ஒரு வீட்டுத் திண்ணையில் படுத்திருந்த ஏழை ஒருவனிடம் அந்த நாய் சென்று, அவன் மீது புரண்டு, புரண்டு விழுந்து அன்பு செலுத்தியது.

நாயை விட அவனே சிறந்தவன் என்று தீர்மானித்து, அவனோடு வாழத் தொடங்கினாள் அந்த மீனவப் பெண்.

அவளைப் பார்த்து முன்பு ஆசைப்பட்ட இளைஞர்களில் ஒருவன், அந்த வழியாகப் போய்க் கொண்டிருக்கையில், "யாருக்கு என்ன கிடைக்க வேண்டும் என்ற விதியோ அப்படித்தான் நடக்கும் போலும்" என்று தனக்குள் சொல்லிக் கொண்டே சென்றான்.

*சிறந்தவனைத் தேடியதன் பலன் எப்படி ஆயிற்று?*

# 31

## பண்புள்ள பையன்

பள்ளிக்குச் சென்று கொண்டிருந்த சிறுவன் ஒருவன், அவனைக் காட்டிலும் பெரிய பையனை அடிக்க முற்பட்டான்.

சிறுவனின் அடிகள் தன் மீது விழாமல் தடுத்துக்

கொண்டிருந்தான் பெரிய பையன். ஆனால், அவன் சிறுவனை ஒரு அடிகூட அடிக்கவில்லை.

அதைக் கவனித்த ஒருவர், பெரிய பையனிடம், "அவன் யார்?" உன் தம்பியா? என்று கேட்டார்.

"அடுத்த வீட்டு பையன்!" என்றான் பெரிய பையன்.

சிறுவன் உன்னை அடித்த போதிலும் நீ ஏன் திருப்பி அடித்திருக்கக் கூடாது? என்றார் அவர்.

"அவனோ சிறுவனாக இருப்பதால், அவனை அடிக்க எனக்கு மனம் இல்லை" என்றான் பெரிய பையன்.

'அவன் ஒரு பண்புள்ள பையன்' என்று எண்ணி மகிழ்ந்தார்.

*வலிமையுள்ளவன் எளியவனை தாக்குவது வீரத்தனம் ஆகுமா?*

# 32

# பால்கோவாவுக்காக உயிரை விட்டவன்

ஒரு சிற்றூரில் செட்டி ஒருவன் இருந்தான். அவன் ஒரு கஞ்சன்.

அவன் மளிகைக் கடை வைத்திருந்தான். எவருக்குமே கடன் கொடுக்க மாட்டான்.

தர்மம் என்பதே அவனுக்குத் தெரியாது. ஒரு காசுகூட அவன் பிச்சை போட்டதில்லை.

செட்டிக்கு மனைவி மட்டுமே இருந்தாள். குழந்தைகள் இல்லை.

"இந்தச் செட்டி தானும் அனுபவிக்காமல், தர்மமும் செய்யாமல், யாருக்குச் சேர்த்து வைக்கிறானோ" என்று ஊரார் பேசுவார்கள்.

செட்டிக்குப் பால்கோவா செய்து தின்ன வேண்டும் என்று வெகு நாட்களாக ஆசை உண்டாயிற்று. மனைவியிடம் சொன்னான். மனைவி பாலைக் காய்ச்சிக் கொண்டிருந்தாள். அப்பொழுது எவனாவது உறவினன் வந்து விட்டால் என்ன செய்வது என்று எண்ணினான் செட்டி.

"பால்கோவா செய்ததும் என்னை வந்து கூப்பிடு, நான் தோட்டத்து கிணற்றடியில் மறைந்திருக்கிறேன்" என்று கூறிவிட்டுச் சென்றான் செட்டி.

அந்தச் சமயத்தில், செட்டியின் நெருங்கிய உறவினன் ஒருவன் அங்கு வந்தான். அவன் செட்டியின் கஞ்சத்தனத்தை நன்றாக அறிந்தவன்.

பால்கோவா தயாரித்துக் கொண்டிருந்த செட்டியின் மனைவியிட ம் சென்று "செட்டி எங்கே?" என்று கேட்டான். அவள் பதில் சொல்லவில்லை.

வந்தவன் தோட்டத்து வாசற்படியில் நின்று கொண்டு, "உறவுக் காரன் வந்திருக்கிறேன்" என்று உரத்த குரலில் சொன்னான்.

அதைக் கேட்டதும் செட்டிக்கு உயிர்போகும் நிலை ஏற்பட்டது. வந்திருக்கும் உறவினனை அனுப்பிவிட, செட்டி ஒரு தந்திரத்தைக் கையாண்டான்.

"செட்டி செத்துப் போய் விட்டதாகச் சொல்லி அழும்படி" மனைவியிடம் இரகசியமாகச் சொன்னான்.

அவளும் அப்படியே சொல்லி, அழத் தொடங்கிவிட்டாள்.

செட்டியின் தந்திரத்தைஅறிந்த உறவினனும் கூடச் சேர்ந்து அழுதான்.

அழுகுரல் கேட்டு, அக்கம் பக்கத்தில் இருப்பவர்கள், உறவினர்கள், ஊர்மக்கள் அனைவரும் வந்து கூடிவிட்டனர்.

பிறகு, இறுதிச் சடங்குகளை விரைந்து செய்து, பாடையில் செட்டியை வைத்து, சுடுகாட்டுக்குக் கொண்டு போய் சிதையில் வைத்து தீயும் மூட்டினார்கள்.

அப்போதும் கூட, செட்டி மூச்சு விடாமல் பிணம் போலவே கிடந்தான்.

அதைக் கண்டு நடுநடுங்கிப் போன செட்டியின் மனைவி. அழுதபடியே, சிதை அருகில் போய் "ஐயோ! இப்பொழுதாவது எழுந்திருங்கள். தீ பரவி வருகிறதே!" என்று அலறினாள்.

ஆனாலும், செட்டி எழுந்திருக்காமல், "எனக்குப் பண்டம் தான் முக்கியம், உயிர் பெரிது அல்ல" என்று கூறி சிதையில் படுத்தவாறே, எரிந்து சாம்பலாகி விட்டான் செட்டி.

*இத்தகைய கஞ்சன், கருமிகளும் இருப்பார்கள் போலும்!*

# 33

## ஊராரை ஏமாற்றி பறிகொடுத்தான்

ஒரு சிறிய நகரத்துக்கு பிராமணன் ஒருவன் வந்தான்.

அந்த நகரத்தில் இருந்த பெரிய வணிகனை தெரிந்து கொண்டு, அவனிடம் சென்றான் பிராமணன்.

"வணிகப் பிரபுவே! நான் சாஸ்திரங்கள் கற்ற புரோகிதன். புனிதப் பயணம் மேற்கொண்டு, ஊர் ஊராகச் சென்று, பச்சை

நெல்லும், உணவுப் பொருள்களும் சேகரித்து, நூறாவது நாளில் கங்கைக் கரையில், உலக நன்மையைக் கருதி, ஒரு யாகம் நடத்தி, ஆயிரம் ஏழைகளுக்கு உணவு அளிக்க விரதம் எடுத்துக் கொண்டிருக்கிறேன். இந்த நல்ல காரியத்துக்கு தாங்களும் உதவி, மற்றவர்களையும் உதவச் செய்ய வேண்டும், இந்த ஏற்பாட்டுக்குத் தாங்கள் தலைவர் என்று மிகவும் பணிவோடு கூறினான் புரோகிதன்.

அவன் கூறியதை நம்பிய வணிகன், அவனை ஒரு பிராமணன் வீட்டில் தங்கச் செய்தான், அதோடு நெல்லும், உணவுப் பொருள்களையும் கொடுத்தான். மற்றவர்களையும் கொடுக்கும்படி கூறினான். அவற்றை எல்லாம் கொண்டுபோய் அடுத்த ஊரில் விற்று ஆயிரம் பொன்வரை சேர்த்து விட்டான். அதைக் கொண்டுபோய் தொலைவில் உள்ள மரத்தடியில் புதைத்து வைத்துவிட்டான் புரோகிதப் பிராமணன்.

"உணவுப் பொருள்கள் எல்லாம் எங்கே?" என்று விசாரித்தான் வணிகன். "சேரச் சேர, அவற்றை கங்கைக் கரைக்கு அனுப்பிக் கொண்டிருக்கிறேன்" என்றான் புரோகிதன்.

தினமும் காட்டுக்குப் போய் தான் புதைத்து வந்த பொன் இருக்கிறதா, என்று பார்த்து வந்தான் புரோகிதன்.

வழக்கம் போல், அவன் போய் பார்க்கும் போது, புதைத்து வைத்த பொன் காணாமல் போனதை அறிந்து, அலறி அடித்து ஓடி வந்து வணிகனிடமும், தான் தங்கியிருந்த வீட்டுப் பிராமணனிடம், பறிகொடுத்ததைச் சொல்லி அழலானான்.

அவனுக்கு உதவி செய்த வணிகன், "பொருள் நிலையில்லாதது. மேகம் போல் வந்து, மறைந்து விடும் தன்மை உடையது தானே, மேலும், நீ உழைத்துச் சம்பாதித்தது இல்லையே, ஊராரை ஏமாற்றி சேர்த்தது தானே?" என்றான்.

புரோகிதன் ஆறுதல் அடையாமல், ஒரு கோயிலில் போய் "உண்ணாவிரதம் இருந்து,உயிரை விடப் போகிறேன்" என்று சொல்லிவிட்டுச் சென்றான். புரோகிதனின் உண்ணாவிரத தற்கொலை செய்தி அந்த நகரத்து அரசனுக்கு எட்டியது. புரோகிதனை அழைத்து வரச் செய்து, "இந்த ஆயிரம் பொன் உனக்கு எப்படி வந்தது?" என்று கேட்டான் அரசன்.

புரோகிதன், தான் பொய் சொல்லி, மக்களை ஏமாற்றி, கிடைத்த பொருள்களை விற்றுச் சேர்த்த பொன்" என்று உண்மையை ஒப்புக் கொண்டான்.

"ஒவ்வொருவீடாகச் சென்று, ஆயிரம் பொன், எந்த வீட்டில் இருக்கிறது என்பதைக் கண்டு பிடிக்குமாறு, காவலர்களுக்கு உத்தரவிட்டான் அரசன்

அவர்கள் சோதனை செய்ததில், வணிகனுடைய வேலையாள் வீட்டில் பொன் அகப்பட்டது.

அவனை அழைத்து வரச் செய்து, விசாரித்தான் அரசன். "புரோகிதன் ஊராரிடம் சேகரித்த பொருள்களை, கங்கைக் கரைக்கு அனுப்பாமல் அடுத்த ஊரில் விற்றதையும், அதை மரத்தடியில் புதைத்து வைத்ததையும், புரோகிதனுக்குத் தெரியாமல் உளவுபார்த்து, அதை எடுத்து வந்தேன்" என்றான் வணிகனின் வேலையாள்.

"புரோகிதனின் மோசடியை, உளவு பார்த்து மரத்தடியில் புதைத்திருந்ததை எடுத்த ஆயிரம் பொன்னையும் அரசாங்கத்தில் ஒப்படைக்காதது என் குற்றம். என்றாலும், புரோகிதனின் மோசடியை ஊரார் அறியச் செய்ததால், உனக்குத் தண்டனை விதிக்காமல் விடுவிக்கிறேன்" என்றான் அரசன்.

அதன்பின் "யாகம் என்றும், ஆயிரம் ஏழைகளுக்கு உணவு அளிப்பதாகவும் ஊராரை ஏமாற்றியதோடு, உண்ணாவிரதம் இருந்து உயிர்விடப் போவதாக, பயமுறுத்தியதற்காகவும் ஒரு வருடம் சிறை தண்டனை புரோகிதனுக்கு விதித்தான் அரசன்.

அந்த ஆயிரம் பொன்னுக்கும், உணவுப் பொருள்களை வாங்கி, ஆயிரம் ஏழைகளுக்கு, உணவு அளிக்குமாறு வணிகனுக்கு உத்தரவிட்டான் அரசன்.

*யாகம், அன்னதானம் என்று சொல்லி மோசடி செய்கிறவர்கள் பலர் இன்றும் காணப்படுகின்றனர்.*

# 34

# ஏமாந்த சகோதரர்கள்

ஒரு ஊரில் இரண்டு வாலிபர்கள் முரட்டுத்தனமாக சச்சரவிட்டு, அடிதடியில் இறங்கி விட்டனர்.

வழியில் சென்ற ஒருவர் அவர்களை விலக்கிவிட்டு, "எதற்காக சண்டை போட்டுக் கொள்கிறீர்கள்?" என்று கேட்டார்.

"நாங்கள் இருவரும் ஒரு தாயின் வயிற்றில் பிறந்தவர்கள். எங்கள் தந்தை ஒரு முனிவர். அவர், மிகச் சிறப்பு வாய்ந்த மூன்று பொருள்களை வைத்துவிட்டு மறைந்துவிட்டார். அவற்றை யார் எடுத்துக் கொள்வது என்ற சச்சரவில் இப்போது ஈடுபட்டு இருக்கிறோம் என்றனர் வாலிபர்கள்.

"அந்த மூன்று பொருள்களும் என்னென்ன?" என்று கேட்டார் வழிப்போக்கர்.

அவை"பாதக்குறடு, கைத்தடி, அமுத சுரபிக் கிண்ணி." "பாதக் குறட்டை காலில் மாட்டிக் கொண்டு, எங்கே செல்ல விரும்பினாலும், உடனே போய்ச் சேரலாம்."

"கைத்தடியால் எதை வரைந்தாலும் அது உடனே உருவம் பெற்றுவிடும்".

"அமுத சுரபிக் கிண்ணத்தில் வேண்டும்போது வேண்டிய உணவு நிறைந்திருக்கும்".

இதுதான் அந்தப் பொருள்களின் சிறப்பு என்று இருவரும் கூறினர்.

அந்தப் பொருள்களின் ரகசியத்தை தெரிந்து கொண்ட வழிப்போக்கர் அவர்கள் இருவருக்கும் ஒரு யோசனை கூறினார்.

இருவரும் ஒரு மைல் தொலைவு ஓடி, எவன் முதலில் வெற்றி அடைகிறானோ, அவனே அந்தப் பொருள்களை எடுத்துக் கொள்ளலாம்" என்றார். அதற்குச் சம்மதித்து இருவரும் ஓட முற்பட்டனர்.

அவர்கள் இருவரும் ஓடுகையில், வழிப்போக்கர் பாதக் குறடைகாலில் மாட்டிக் கொண்டு, அமுதசுரபிக் கிண்ணத்தையும், கைத்தடியையும் கையில் எடுத்துக் கொண்டு பறந்து போய் விட்டார்.

சகோதரர்கள் இருவரும் தாங்கள் ஏமாந்துபோனதை நினைத்து வருந்தினர்.

பாகப் பிரிவினை என்று சச்சரவு ஏற்படும் போது, சிலவற்றை இழக்க நேரிடும்

# 35

## பிறவிப் பகை நட்பாக முடியாது

ஒரு ஊருக்கு வெளியே அரசமரம் ஒன்று இருந்தது. அதை இருப்பிடமாகக் கொண்டு கீரிப்பிள்ளை, எலி, பூனை, ஆந்தை ஆகிய நான்கும் வசித்து வந்தன.

கீரியும், எலியும் மரத்தின் வேரின்கீழ் உள்ள வளைக்குள் தனித் தனியாக வசித்தன.

பூனை, மரத்தின் அடியில் உள்ள பெரிய பொந்தில் வசித்தது.

ஆந்தை, மரத்தின் உச்சியில் இருந்த ஒரு பொந்தில் வசித்தது.

எலியின் நிலைமைதான் பரிதாபத்துக்கு உரியதாக இருந்தது. ஆந்தை, பூனை, கீரி இவற்றின் கண்களில் படாமல், எலி தினமும் இரை தேட வேண்டியதாயிருந்தது.

ஆந்தைக்குப் பகலில் கண்தெரியாது, அதனால் இரவில்தான் இரை தேடுவது வழக்கம்.

பூனையோ பகலிலும் இரவிலும் அருகில் இருந்த வயலுக்குச் சென்று பயமின்றி இரைதேடித் தின்று வந்தது.

பூனையைப் பிடிப்பதற்காக வேடன் ஒருவன், வயலுக்குப் போகும் வழியில், கண்ணி வைத்துவிட்டுப் போனான்.

வழக்கம் போல், எலிகளைப் பிடிக்கச் சென்ற பூனை, வேடன் போட்டிருந்த கண்ணியில் சிக்கிக் கொண்டது, தப்பிக்க வழி இல்லை.

சிறிது நேரத்தில், பதுங்கிப் பதுங்கி, திருட்டுத் தனமாக, இரை தேடி வந்த எலி, கண்ணியில் சிக்கிக் கொண்டிருந்த பூனையைக்

கண்டு துள்ளிக் குதித்தது. அப்பொழுது, ஆந்தையும் கீரியும் சேர்ந்து சென்ற போது பூனை கண்ணியில் சிக்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தன. இனி, பூனையைப் பற்றிய பயம் இல்லை. எலியைப் பிடித்து விடலாம் என்று எண்ணின.

தன்னைக் குறி வைத்து ஆந்தையும், கீரியும் வருவதைக் கண்டு எலி நடுங்கியது, கீரிக்கும் ஆந்தைக்கும் பயந்து எலி, வழியை மாற்றிக் கொண்டு, பூனையின் பக்கம் சென்றது, பூனையின் கால்கள் கண்ணியில் சிக்கிக் கொண்டிருந்த போதிலும், ஒரே அறையில் கொன்று விடுமே என்று கலக்கமுற்று, கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தது.

பூனையின் அருகில் சென்று, "நீ என் எதிரியாக இருந்தாலும்கூட, இப்போது நீ சிக்கிப் பரிதவிப்பதைக் காணும் போது, எனக்கு இரக்கமேலிடுகிறது. என் பற்களால் இந்தக் கண்ணியை கடித்து உன்னை விடுவித்து விடுகிறேன். ஆனால், நீ விடுபட்டதும், உன்னால் எனக்கு ஆபத்து நேரிடுமோ என்று தான் பயமாக இருக்கிறது" என்றது எலி.

"எலியே! நாம் எதிரிகளான போதிலும், இப்பொழுது என்னை நீ விடுவித்து விட்டால், உனக்கு நண்பனாக இருப்பேன். ஆபத்தான வேளையில் என் உயிரைக் காப்பாற்றிய உன்னை ஒருபோதும் ஒன்றும் செய்ய மாட்டேன் என்று உறுதி அளிக்கின்றேன்" என்று கெஞ்சியது பூனை.

உடனே எலி பூனையை நெருங்கியது. அதைக் கண்ட கீரியும், ஆந்தையும் எலியைப் பிடிக்க வழியில்லாமல் ஏமாற்றத்துடன் திரும்பிச் சென்று விட்டன.

எலியிடம், "சீக்கிரம் பற்களால் கண்ணியை அறுத்து விடு, விடியப் போகிறது, வேடன் வந்து விடுவானே என்று அவசரப்படுத்தியது, பூனை

கண்ணிகளை கத்தரிப்பது போல், பற்களை வைத்து பாசாங்கு செய்து,

வேடனின் வருகைக்காகக் காத்துக் கொண்டிருந்தது எலி.

கண்ணியிலிருந்து சீக்கிரமே விடுபட்டு விடுவோம் என்ற நம்பிக்கையோடு இருந்தது பூனை.

பொழுது விடிந்தது, வேடனும் வந்து கொண்டிருந்தான்.

அவனைக் கண்ட எலி, கண்ணியின் சுருக்கை இறுகச் செய்துவிட்டு, வேடனுக்கு அஞ்சி ஓடத்தொடங்கயிது.

எலியிடம் "இது நியாயமா? உதவிபுரிவதாகக் கூறி, நம்பிக்கை மோசம் செய்து விட்டாயே?" என்று பரிதாபமாகக் கேட்டது பூனை.

"விரோதிகள்கூட சந்தர்ப்பம் காரணமாக, நண்பர்களாக ஆவார்கள். ஆனால், அத்தகைய நட்பானது உண்மையான நட்பாகவும், வெகு காலத்துக்கு நீடிக்கக் கூடியதாகவும் இருக்காது" என்று கூறி, ஒரே ஓட்டமாக ஓடியது எலி.

*பிறவியிலேயே பகைவர்களாக இருப்பவர்கள் நட்புக் கொள்ள முடியாது.*

# 36

# ஆப்பை அசைத்த குரங்கு

ஒரு மரவியாபாரி, காட்டில் உள்ள மரங்களை, தொழிலாளர் களைக் கொண்டு வெட்டச் செய்து விற்பனை செய்து வந்தான்.

வெட்டப்பட்ட மரங்களை பயன்படுத்துவதற்கு ஏற்றபடி ரம்பத்தால் அறுப்பார்கள். அப்படி அறுக்கும்போது, மரத்தின் பிளவுக்கு மத்தியில் ஒரு முளையை அதில் நட்டு வைப்பார்கள்.

ஒரு நாள் வழக்கம் போல், தொழிலாளர்கள் வேலை முடித்து போகும்போது, அறுக்கப்பட்ட மரங்களின் நடுவே, ஆப்பை (முளையை) அடித்து வைத்துச் சென்றனர்.

அங்கே பெரிய ஆலமரம் ஒன்று இருந்தது. ஏராளமான குரங்குகள் அதில் தங்கி இருந்தன.

அந்தக் குரங்கக் கூட்டத்தில், பெரிய குரங்கு ஒன்று இருந்தது. அது மிகவும் பொல்லாதது, மற்ற குரங்குகளை எல்லாம் அதிகாரம் செய்து, மிரட்டி வந்தது. அதனால், அந்தக் குரங்குகள் எல்லாம் பயந்து ஓடிவிடும்.

பெரிய குரங்கினால் துன்பப்பட்டுக் கொண்டிருந்த குரங்குகள் எல்லாம் அதை வெறுத்து, எங்கேயாவது ஒழிந்து போகாதா? அதற்கு சாவு வராதா என்று கருவிக் கொண்டிருந்தன

ஒரு நாள், அந்தப் பெரிய குரங்கு தனியே எங்கேயோ போய்க் கொண்டிருந்தது.

மரம் அறுக்கும் இடத்தை அடைந்தது, சுற்று முற்றும் பார்த்தது.

எவரும் அங்கே காணப்படவில்லை. மரங்களின்மீது ஓடி ஆடிக் குதித்தது.

ஆப்பு அடிக்கப்பட்டிருந்த மரம் ஒன்று அந்தக் குரங்கின் கண்ணில் பட்டது.

அது அறுத்து, பாதி பிளந்து, ஆப்பு அடிக்கப்பட்டிருந்தது. அதன் மீது உட்கார்ந்து, அந்த ஆப்பை அசைத்து, அசைத்துப் பிடுங்கியது. பிளவுபட்டிருந்த மரம் ஒன்றாக இணைந்தது, அதன் நடுவில் உட்கார்ந்த குரங்கு, அதில் அகப்பட்டு நசுங்கி மாண்டது.

மற்ற குரங்கள் எல்லாம் ஓடி வந்து பார்த்தன. பொல்லாத குரங்கு ஆப்புக்கு மத்தியில் நசுங்கிச் செத்ததைக் கண்டு துள்ளிக் குதித்தன.

*இதைத்தான், "ஆப்பதனை அசைத்து விட்ட குரங்கு போல" என்று மக்கள் கூறுவார்கள்.*

# 37

## உதவியும் ஒத்துழைப்பும்

ஒரு நாள், வாயில் உள்ள பற்கள் அனைத்தும் ஒன்று கூடி, 'நாம் எல்லோரும் க டப்பட்டு பொருள்களை சிரமத்தோடு கடித்து, மெல்லுகிறோம். ஆனால், இந்த நாக்குக்கு ஒரு உழைப்பும் இல்லை, சுவைத்து, உண்பதைத் தவிர வேறு எதுவும் இல்லை. மேலும், நாம் பெரும்பான்மையானவர்கள். நாக்கோ சிறுபான்மை. அதனால் நாம் நம்முடைய வலிமையைக் காட்டுவதற்காக, நாக்கைக் கடித்து புண் ஆக்கிவிடுவோம், அது என்ன செய்யும் பார்க்கலாம் என்ற தீர்மானித்தன.

அதை அறிந்த நாக்கு, அடே பற்களே! நாம் அனைவரும் மனித உடலில் உள்ள உறுப்புகள். ஒன்றுக்கொன்று உதவியுடனும், ஒத்துழைப்புடனும் இருந்து, செயல்படுவதே முறை. இதில் பெரும்பான்மையினர், சிறுபான்மையினர் என்ற பேச்சுக்கே இடமில்லை. அவரவர் கடமையை அவரவர் செய்வதே சிறப்பு. மீறி தகராறு செய்வீர்களானால், நான் என்ன செய்வேன் தெரியுமா? தெருவில் போய்க் கொண்டிருக்கும் ஒரு முரட்டு ஆளைப் பார்த்து, 'அடே, முரடனே! படவா!" என்று சொல்லி விட்டு, நான் உள்ளே போய் விடுவேன்". அவன் வேகமாக வந்து, முகத்தில் பல குத்துகள் விடுவான். நீங்கள் எல்லோரும் ஆளுக்கு ஒருபக்கமாக, உதிர்ந்து போய்விடுவீர்கள்" என்று எச்சரித்தது நாக்கு.

நாக்கு கூறியது உண்மைதான்! என்பதை பற்கள் உணர்ந்தன.

*ஒருவருக்கு ஒருவர் உதவியும் ஒத்துழைப்பும் இல்லாமல் வாழமுடியாது.*

# 38

## ஆற்றிலே மூழ்குவதே நல்லதா?

ஒரு ஊரில் தொடக்கப் பள்ளி ஆசிரியர் ஒருவர் ஆற்றில் குளிப்பதற்காகச் சென்றார்.

அவர் குளிக்கும்போது திடீரென வெள்ளம் வந்து ஆசிரியரை இழுத்துச் சென்றது.

"என்னை யாராவது காப்பாற்றுங்கள்" என்று பலமுறை கூச்சலிட்டார். அவருக்கோ நீந்தத் தெரியாது.

அப்போது, ஆற்றின் கரையில் வேட்டி துவைத்துக் கொண்டிருந்தவன் கூச்சலைக் கேட்டு நீந்திச் சென்றான்.

அவரை நெருங்கியதும். "உன்னைக் காப்பாற்றினால் என்ன தருவாய்?" என்று கேட்கலானான்.

"நான் தொடக்கப்பள்ளி ஆசிரியர், உனக்குக் கல்வி கற்றுத் தருகிறேன்" என்றார் அவர்

அவன், அவரைக் காப்பற்றுவதற்கு நெருங்கினான்.

"நில் நீ ஏதாவது படித்திருக்கிறாயா?" என்ற கேட்டார் ஆசிரியர்.

"நான் ஒன்றுமே படிக்கவில்லை, பள்ளிக் கூடப்பக்கமே நான் போனதில்லை" என்றான் அவன்.

"நான் ஆற்றில் மூழ்கிப் போனாலும் சரி, ஆரம்பத்திலிருந்து உனக்கு 'அ, ஆ' கற்றுத்தர என்னால் முடியாது" என்றார் ஆசிரியர்.

*"எழுத்தறிவித்தவன் இறைவன்" என்பது நீதி வாக்கியம்*

# 39

## உயிர் இனங்களுக்குள் உதவி

ஒரு காட்டில், புறாக்களைப் பிடிப்பதற்காக ஒரு வேடன் வளை விரித்து இருந்தான், அதில் தானியங்களையும் தூவி இருந்தான்.

அதைக் கண்ட புறாக்கூட்டம் வளையுடன் இருந்த தானியங்களைத் தின்றன.

பிறகு, பறக்க முயன்றபோது, வலையில் மாட்டிக் கொண்டன.

புறாக்கள் எல்லாம் ஒருமிக்க முயன்று, அலகால் கவ்வியபடி, வலையோடு பறந்து சென்று, சிறிது தொலைவில் இறங்கின. அந்தப் புறாக்களுக்கு எல்லாம் பெரிய புறா ஒன்று, தனக்குப் பழக்கமுள்ள ஒரு எலியிடம் வலையோடு சென்று, நிலைமையைக் கூறியது.

அந்த எலி தன் பற்களால் வலையைக் கடித்து, புறாக்களை விடுவித்தது. புறாக்கள் மகிழ்ச்சியுடன் பறந்து சென்றன.

அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்த ஒரு காக்கையானது, தனக்கு ஒரு நட்பு இருந்தால், ஆபத்து வேளையில் உதவியாக இருக்குமே என்று கருதியது.

எலியிடம் சென்று நாம் இருவரும் நட்பாக இருப்போம் என்றது காக்கை

எலி அதை நம்பவில்லை, "என்னைக் கொத்தி தின்பதற்காகவே, என் நட்பை நீ விரும்புகிறாய்" என்று கூறி, புதருக்குள் ஓடியது.

காக்கை பலவாறு எடுத்துக் கூறியது. பிறகு எலியும், காக்கையும் நட்புக் கொண்டன.

ஒரு நாள் காக்கை, 'எலியே! சிறிது தொலைவில் உள்ள

நதியில் எனக்கு நட்பான ஆமை ஒன்று உள்ளது, அங்கே சென்றால், இரை நிறையக் கிடைக்கும் பயமின்றி சிலநாட்கள் தங்கலாம் என்று கூறியது.

எலியும் அதற்குச் சம்மதித்தது. இரண்டும் ஆமையிடம் சென்றன.

அவற்றை மகிழ்ச்சியோடு வரவேற்று இரை அளித்தது ஆமை.

அப்போது, ஒரு வேடனுக்குப் பயந்து ஒரு மான் ஓடிவந்தது.

எலி, காக்கை, ஆமை மூன்றும் மானுக்கு அடைக்கலம் தந்து நட்போடு வாழ்ந்தன.

ஒரு நாள், வேடனின் வலையில் மான் அகப்பட்டுக் கொண்டது.

மரத்தின் மீது இருந்த காக்கை, அதைப் பார்த்ததும் உடனே ஆமையையும் எலியையும் கூட்டிக் கொண்டு போய் மானை விடுவித்தது.

அந்தச் சமயம் வேடன் வந்தான். எலியும், மானும், காகமும் வேடனிடம் அகப்படாமல், தப்பி ஓடி விட்டன. ஆனால், ஆமையால் வேகமாக ஓட இயலாததால், வேடன் அதைப் பிடித்து கூடையில் போட்டு விட்டு, உணவு அருந்தச் சென்றான். ஆமை அகப்பட்டுக் கொண்டதை நினைத்து எலி, காகம், மான் மூன்றும் வருந்தின.

மானுக்கு ஒரு யோசனை தேன்றியது. அப்படியே செய்யலாம் என எலியும் காகமும் தீர்மானித்தன.

மான் செத்துப் போனது போல், படுத்துக் கொண்டது, அதன்மீது காக்கை அமர்ந்து தன் கண்ணைக் கொத்துவது போல் பாசாங்கு செய்தது.

மான் செத்துக் கிடப்பதாக வேடன் நினைத்து ஆமையிருந்த கூடையை அப்படியே போட்டு விட்டு, மான் கிடந்த இடத்தை நோக்கி வந்து கொண்டிருந்தான்.

இதுவே நல்ல சமயம் என்று நினைத்த ஆமை, அருகில் இருந்த நதிக்குள் குதித்து மறைந்தது.

ஆமை தப்பியதைக் கண்ட மான், விர்ரென்று பாய்ந்து ஓடிவிட்டது.

காக்கை பறந்து மரத்தின்மீது அமர்ந்தது. எலி தூரத்தில் நின்று பார்த்து மகிழ்ந்தது.

ஆமையும், மானும் ஏமாற்றியதை எண்ணி வேடன் வருத்தத்தோடு வீட்டுக்குத் திரும்பினான்.

பிறகு, அந்த ஜீவன்களும் ஒன்றுக்கொன்று உதவியாக இருந்து வாழ்ந்தன.

# 40

## கடல் எவ்வளவு பெரியது?

கடலில் வசித்து வந்த தவளை ஒரு நாள் கரைக்கு வந்தது.

அருகில் இருந்த கிணற்றில் வசித்த தவளையும் வெளியே வந்தது.

இரண்டு தவளைகளும் சந்தித்துக் கொண்டன. ஒன்றை ஒன்று அறிமுகம் செய்து கொண்டது.

அப்போது, "கடல் எவ்வளவு பெரிது?" என்று கேட்டது கிணற்றுத் தவளை. ஏனென்றால் அதற்கு கடலைப் பற்றி தெரியாது.

"கடல் மிகப் பெரிது!" என்றது கடல் தவளை.

"இவ்வளவு பெரிது என்று ஒரு அளவு சொல்லு" என்று கேட்டது கிணற்றுத்தவளை.

"அதாவது கடலுக்கு அளவே கிடையாது. எங்கே

தொடங்குகிறது, எங்கே முடிகிறது" என்ற அளவே இல்லை என்றது கடல் தவளை.

"எதற்குமே ஒரு அளவு உண்டு என்பார்களே. அப்படி ஒரு அளவைக் கூறு!" என்று வற்புறுத்தியது கிணற்றுத் தவளை.

"என்னால் அப்படிக் கூறவே முடியாது, பார்த்தால்தான் புரிந்து கொள்ள முடியும்," என்று கூறியது கடல் தவளை.

கடல் தவளை கூறியதைக் கேட்டுப் பொறுமை இழந்த கிணற்றுத் தவளை, "இந்தக் கிணற்று அளவாவது இருக்குமா நீ வசிக்கும் கடல்?" என்று கேட்டது கிணற்றுத் தவளை.

கடல் தவளை பலமாகச் சிரித்துக் கொண்டே, என்ன சொல்லியும் உனக்குப் புரியவில்லையே! கடுகு எங்கே? மலை எங்கே? என்பது புரியாத உனக்கு எப்படி புரிய வைக்கமுடியும்?" என்று சலித்துக் கொண்டது கடல் தவளை.

உடனே கிணற்றுத் தவளைக்குக் கோபம் அதிகரித்து, "நீ ஒரு பொய்யன்! கிணற்றை விட கடல் பெரிதாகவே இருக்க முடியாது" என்று கூறிவிட்டுச் சென்றது.

*'உலக நடப்புத் தெரியாதவனை கிணற்றுத் தவளை' என்று கூறுவது வழக்கம்.*

# 41

## ஆண்டிகள் கூடி மடம் கட்டுதல்

ஒரு சிறிய நகரத்தில் இருந்த ஆண்டிகள் (துறவிகள்) வீடு வீடாகச் சென்று பிச்சை கேட்டு வாங்கி உண்பார்கள்.

இரவில் ஒரு மடத்தில் வந்து தங்குவது வழக்கம்.

மடம் சரியாகப் பராமரிக்கப்படாமல் இருந்தது. கொசுக்கடி,

குப்பை கூளங்கள், சாக்கடை இவற்றால் மோசமாக இருந்தது. ...மும் போதாது. என்றாலும், ஆண்டிகள் வந்து சிரமத்தோடு அங்கே இரவில் தங்கி காலையில் எழுந்து செல்வார்கள். “இப்படி எத்தனை நாட்களுக்கு தான் நாம் கஷ்டப்படுவது? இரவில் நிம்மதியாக தூங்க முடியவில்லை. நமக்கு என்று தனியாக ஒரு மடம் கட்டி, அதில் வசதியாக இருக்க வேண்டும் ஆளுக்கு ஒரு அறை, பொதுக் கூடம் ஒன்று, கிணறு இவற்றை அமைத்துக் கொண்டால் சுகமாக இருக்கும் என்று இரவில் எல்லோரும் கூடிப் பேசுவார்கள். பிறகு தூங்கிவிடுவார்கள்.

காலையில் எழுந்ததும் வழக்கம் போல் ஒவ்வொருவரும் ஆளுக்கு ஒரு பக்கம் பிச்சை எடுக்கப் புறப்பட்டு விடுவார்கள்.

மீண்டும் இரவு மடத்துக்கு வருவார்கள்.

மடம் கட்டுவது பற்றி பேசுவார்கள், பிறகு, தூங்கிவிடுவார்கள்

தினமும் வாயால் பேசி, மனதால் மடத்தைக் கட்டி அந்த ஆண்டிகள் காலத்தை கழித்தார்கள்.

*பிச்சை எடுத்து உண்ணும் ஆண்டிகள் மடம் கட்ட முடியுமா?*

# 42

# பயமும் பீதியும் கொண்டு செத்தனர்

ஒரு மலை உச்சியில், முனிவர் ஒருவர் தியானத்தில் ஆழ்ந்து இருந்தார்.

அப்பொழுது, அந்த வழியாக ஒரு நோய் போய்க் கொண்டிருந்தது. அதை அறிந்த முனிவர், “நீ எங்கே போகிறாய்?” என்று கேட்டார்.

“சிறிது தொலைவில், ஒரு கோயில் உள்ளது. அங்கே பெரிய

திருவிழா நடைபெறும், அங்கே சென்றால், காலரா நோயினால் ஆயிரக் கணக்கான பேரைச் சாகடிக்கலாம்" என்று போய்க் கொண்டிருக்கிறேன்" என்று கூறியது அந்த காலரா நோய்.

"அவ்வாறு சாகடிப்பது பெரும்பாவம் அல்லவா?" என்றார் முனிவர்.

"அது பாவம் என்றால், காலரா நோயாக கடவுள் என்னை ஏன் படைக்க வேண்டும்?" என்ற வாதாடியது.

முனிவரால் அது கேட்ட கேள்விக்குப் பதில் அளிக்க இயலவில்லை. ஒருவாறு சமாதானத்துக்கு வந்தார். அதாவது, ஒரு நூறு உயிர்களை மட்டும் காலரா நோயினால் சாகச் செய். மேற்கொண்டு செய்தால், என் சாபத்திற்கு ஆளாவாய்" என்றார்.

முனிவர் கூறியதை ஏற்று, காலரா நோய் திருவிழாக் கூட்டத்திற்குச் சென்றது, அங்கே இரண்டாயிரத்துக்கு மேற்பட்டவர்கள் காலரா நோயினால் இறந்து போனார்கள்.

இச்செய்தி முனிவருக்கு எட்டியது மிகுந்த கோபத்துடன் இருந்தார்.

காலரா நோய் திரும்பி வந்தது. "என்னிடம் நீ வாக்களித்தபடி, நடந்து கொள்ளவில்லை, நூறு உயிர்களுக்கு மேல் சாகடிப்பது இல்லை என்று வாக்குறுதி கொடுத்தாய், ஆனால், இரண்டாயிரம் உயிர்களுக்கு மேல் பலி கொண்டிருக்கிறாயே?" என்று கடிந்து கொண்டார் முனிவர்.

"முனிவரே! நான் சொல்வதை சிறிது பொறுமையாகக் கேளுங்கள்; நான் நூறு பேர்களைத்தான் பலி கொண்டேன், ஆனால், பயத்தினாலும், பீதியினாலும் செத்தவர்கள் இரண்டாயிரத்துக்குமேல் இருக்கும் நான் என்ன செய்ய முடியும்?" என்றது காலரா நோய்.

மக்களின் அறியாமையைக் கண்டு முனிவர் நொந்து கொண்டார்.

# 43

## கார் இருப்பது எதற்காக?

ஒரு ஊரில் செட்டியார் ஒருவர் செல்வச் செழிப்போடு வாழ்ந்தார்.

அவரிடம் கார் ஒன்றும், மாட்டு வண்டி ஒன்றும் இருந்தது.

ரெங்கூனில் இருந்த செட்டியாருடைய வட்டிக் கடையை அரசு சட்டம் காரணமாக, மூடும்படி ஆயிற்று. பின்னர், அங்கே இருந்த நிலங்களை அரசாங்கம் எடுத்துக் கொண்டது.

செட்டியாரின் வசதிகள் யாவும் குறைந்து விட்டது, மாட்டு வண்டியை விற்று விட்டார். வேலை ஆட்களையும் விலக்கி விட்டார்.

வீட்டில் இருந்த நகைகள் முதலானவற்றை விற்று, மிகுந்த சிக்கனத்தோடு வாழ்ந்து வந்தார்.

அந்த நிலையில் காரை மட்டும் விற்க வில்லை. டிரைவரையும் விலக்கி விட்டார். காரும் பழுதாகி விட்டது. ஆனால் அதை விற்கவில்லை.

தினமும் விடியற்காலையில், செட்டியார், அவருடைய மனைவி, அவருடைய மகன் ஆகிய மூவரும் ஷெட்டிலிருந்து தள்ளிக் கொண்டு வந்து வீட்டின்முன் நிறுத்துவார்கள். இரவு பத்து மணிக்குப் பிறகு. முன்போல், காலை மூவரும் தள்ளிக் கொண்டு போய் ஷெட்டில் நிறுத்துவார்கள்.

ஒரு நாள் செட்டியாரின் மகன், “ஓடாத காரை விற்றுத் தொலைக்காமல் காலையில் தள்ளிக் கொண்டு வந்து நிறுத்துவதும், இரவில் தள்ளிக் கொண்டு போய் ஷெட்டில்

விடுவதும் ரொம்பவும் சிரமமாக இருக்கிறது" என்று சங்கடப்பட்டான்.

அதற்குச் செட்டியார், "கௌரவமாக வாழ்ந்தேன். கார் வைத்துக் கொண்டிருப்பதால் பெருமை இருக்கிறது; ஊரார், உறவினர் மதிப்பு வைத்திருக்கின்றனர்.

நல்ல செழிப்புள்ள குடும்பத்திலிருந்து, உனக்குப் பெண்ணைக் கொடுக்க முன்வருவார்கள். திருமணம் நடந்த பின், காரை விற்று விடலாம்" என்றார்.

*நொடித்துப் போனாலும், சிலர், கௌரவத்துடன் இருப்பதாக வெளியில் காட்டிக் கொள்வது இயல்பு. அது ஒரு போலியான வாழ்க்கை!*

# 44

## எளியவர்களால் உதவ முடியும்

செடி, கொடி, மரங்கள் அடர்ந்த பெரிய காடு.

அங்கு ஆண் சிங்கம் ஒன்று அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தது

அப்போது சுண்டெலி ஒன்று, தூங்கிக் கொண்டிருந்த சிங்கத்தின் மேல் ஏறி விளையாடியது.

அதனால் சிங்கத்தின் தூக்கம் கலைந்தது. சினம் பொங்கியது, கண்கள் சிவந்தன. சுண்டெலியைக் கடுமையாகப் பார்த்தது.

சுண்டெலி அஞ்சி நடுங்கியது. சிங்கத்தின் காலடியில் வீழ்ந்து "வனராஜனே! என்னை மன்னித்து விடு, எப்போதாவது நன்றி மறவாமல், உனக்கு உதவி செய்வேன்" என்று மன்றாடியது.

சிங்கம் ஏளனமாகச் சிரித்து, "நீயா எனக்கு உதவி செய்யப் போகிறாய்? ஓடிப்போ," என்று கூறி, சுண்டெலியை மன்னித்தது.

பல நாட்களுக்குப் பிறகு, வேடர்கள் விரித்த வலையில் அந்தச் சிங்கம் அகப்பட்டுக் கொண்டது. தப்பிக்க வழி இல்லாமல் தவித்தது. அந்தக் காடே அதிரும்படி முழுக்கமிட்டது.

இதர மிருகங்கள் எல்லாம் பயந்து ஓடி மறைந்தன.

சிங்கத்தின் குரலைக் கேட்ட சுண்டெலி ஓடி வந்து பார்த்தது. சிங்கத்தின் பரிதாப நிலையைக் கண்டு வருந்தியது.

"வனராஜனே! முன்பு நீ மன்னித்ததை நான் மறக்கவில்லை; என்னுடைய பற்களால் சிறுகச் சிறுகக் கடித்து, வலையைத் துண்டித்து விடுகிறேன். நீ உடனே வலையிலிருந்து வெளியேறி விடலாம்" என்று கூறி, வலையைக் கடித்து, துண்டித்து விட்டது சுண்டெலி.

சுண்டெலி தனக்கு உதவி, உயிர் பிழைக்கச் செய்ததை சிங்கம், நன்றிப் பெருக்கோடு சுண்டெலியைப் பாராட்டியது. முன்பு, ஏளனமாக நினைத்ததை எண்ணி வருந்தியது.

# 45

## ஒற்றுமையே வலிமை

வயது முதிர்ந்த விவசாயி ஒருவருக்கு நான்கு மக்கள் இருந்தனர். அந்த நால்வரும் ஒற்றுமை இல்லாமல், எப்பொழுதும் சண்டையும் சச்சரவுமாக இருந்தனர்.

இவர்கள் இப்படியே இருந்தால், குடும்பம் சிதறிப் போகுமே என்று வருந்தினார் வயதான தந்தை.

அவர் கூறிய புத்திமதிகளை மதிக்காமல் திரிந்தனர்.

ஒருநாள் மக்கள் நால்வரையும் அழைத்தார் தந்தை. அவர்கள் வந்து கட்டிலைச் சுற்றி நின்றனர்.

தன் காலடியில் கிடந்த மூங்கில் கட்டு ஒன்றை மூத்த மகனிடம் கொடுத்து, "இதை முறி" என்றார்.

தன் பலம் முழுவதையும் பயன்படுத்தினான் ஆனால், முறிக்க முடியவில்லை.

அடுத்து இரண்டாவது மகன், மூன்றாவது மகன், நான்காவது மகன், மூவரும் முயன்று பார்த்தனர், ஒருவராலும் முறிக்க இயலவில்லை.

பிறகு, கட்டைப் பிரித்து ஆளுக்கு ஒரு குச்சியைக் கொடுத்தார்.

நால்வரும் சுலபமாக முறித்து விட்டு நின்றனர்.

"இப்படித்தான் உங்கள் வாழ்க்கையும் அமையும், நீங்கள் நால்வரும் ஒற்றுமையாக இருப்பீர்களானால், உங்கள் வாழ்க்கை உறுதியாக விளங்கும். எவரும் உங்களை ஏமாற்ற முடியாது. சண்டை சச்சரவு செய்து, தனித்தனியாக ஆளுக்கு ஒரு பக்கமாக இருப்பீர்களானால், சிதறிப் போவீர்கள். ஒற்றுமையே வலிமை அளிக்கும்" என்றார் தந்தை.

நாட்டுக்கும், குடும்பத்துக்கும், சமூகத்துக்கும் இது பொருந்தும்.

# 46

# துறவிக்கு உண்டான மதிப்பு

ஒரு நாட்டின் அரசனுக்கு ஒரு நாள், ஒரு சந்தேகம் எழுந்தது.

எத்தகைய பற்றும் அதாவது. மண், பெண், பொன் இம் மூன்றிலும் ஆசை கொள்ளாத துறவி இருக்க முடியுமா? என்று சிந்தித்துக் கொண்டிருந்தான்.

பிறகு, அமைச்சனை அழைத்து, "எந்தப் பற்றும் இல்லாத ஒரு துறவி நாட்டில் இருக்க முடியுமா?" என்று கேட்டான் அரசன்.

"அப்படிப்பட்ட துறவி ஒருவர் இருக்கிறார்" என்றான் அமைச்சன்.

அப்படியானால், அந்தத் துறவியை அழைத்து வரும்படி சொன்னான் அரசன்.

"அரசே! துறவிக்கு வேந்தன் துரும்பு" என்று கூறுவார்கள். ஆகையால், அவர் அரண்மனைக்கு வரமாட்டார். நகரத்துக்கு வெளியே, ஒரு மரத்தடியில் அமர்ந்திருக்கிறார். நாம் தான் சென்று அவரைக் காணவேண்டும்" என்றான் அமைச்சன்.

அதற்கான ஏற்பாட்டைச் செய்யும்படி சொன்னான் அரசன்.

தான் கூறியதை மெய்ப்பிக்க எண்ணி முயற்சி செய்தான் அமைச்சன்.

ஒரு நாடக நடிகனைத் தேடிக் கண்டு, 'தனக்கும் அரசனுக்கும் நடந்த உரையாடலைக் கூறி', நகரத்துக்கு வெளியே, ஒரு மரத்து அடியில், காவி உடை அணிந்து, உட்கார்ந்து, 'எல்லாம் இறைவன் செயல்' என்று சொல்லும்படியும், அரசன் பரிசுகள் எதுவும் அளித்தால், அதைப் பெற்றுக் கொள்ளக் கூடாது' என்றும் கூறினான்.

மேலும், இந்த நடிப்புக்காக தான் ஆயிரம் பொன் தருவதாகவும் சொல்லி, துறவியை தயார் செய்தான் அமைச்சன்.

மறுநாள் அரசன், அரசி, அமைச்சர் அகிய மூவரும் துறவியைக் காணச் சென்றனர்.

துறவியைப் பார்த்ததும் அரசனும் அரசியும், அவர் காலில் விழுந்து வணங்கினர். வெள்ளித் தாம்பாளத்தில், பட்டாடை, பழங்கள், பூ ஆகியவற்றோடு, ஐயாயிரம் பொன்னையும் வைத்து, துறவியிடம் வைத்து, அதை ஏற்கும்படி கூறினர்.

"அரசனே! "எல்லாம் இறைவன் செயல்!" நானோ முற்றும் துறந்தவன், எனக்கு எதற்காக இவை? இவற்றைப் பார்த்தால், என் உடலும், உள்ளமும் நடுங்கும். இவற்றை நீ எடுத்துச் சென்று, ஏழை எளியவர்களுக்கு வழங்கி, நலத்துடன் வாழ்வாயாக! எல்லாம் இறைவன் செயல்" என்று வாழ்த்தினான் துறவி.

அரசன் வியப்புற்று மனநிறைவோடு அரண்மனைக்குத் திரும்பினான்.

அதன்பின், அமைச்சன், துறவியிடம் சென்று, உண்மையான துறவியைக் காட்டிலும் சிறப்பாக நடித்து விட்டாய். நான் சொன்னபடி, இதோ ஆயிரம் பொன் என்று கூறி அவனிடம் கொடுத்தான்.

"எனக்கு வேண்டாம். நாட்டின் அரசனும் அரசியும் இந்த ஏழையின் காலில் விழுந்து வணங்கியது மிகவும் பெருமைப் படத்தக்கது. இப்படி ஒரு செயல் புரிந்து, இந்த ஏழை நடிகனை, நீங்கள் பெருமைப்படுத்தி விட்டீர்கள். அதுவே எனக்குப் போது மானது. மற்றும், இந்த நிகழ்ச்சியைப் பார்த்ததும் குடும்பத்தில் சில கடமைகளை நிறைவேற்றி விட்டு, உண்மையிலேயே, துறவி ஆகி விடலாமா என்ற எண்ணம் எனக்கு எழுகின்றது" என்றான்.

உண்மையிலேயே பற்றற்றவனுக்கு மதிப்பு உண்டாகும்.

உண்மையிலேயே அத்தகையவர்களைக் காண்பது எளிது அல்ல.

# 47

## சுற்றிச் சுற்றி வரும் பாசம்

ஒரு ஊரில் சிறிய குடும்பம். கணவன், மனைவி, மகள், மகன் ஆகிய நால்வரும் மகிழ்ச்சியுடனும், பாசத்துடனும் வாழ்ந்து வந்தனர்.

சந்தைக்குப் போன தாய் திராட்சைக்குலை ஒன்றை வாங்கிக் கொண்டு வந்தாள். அதை தன் மகளிடம் கொடுத்தாள் தாய்.

அதில் ஒரு பழத்தை எடுத்து வாயில் போட்டுச் சுவைத்ததும் தன் தம்பியின் நினைவு வந்தது. உடனே தம்பியிடம் கொடுத்தாள்.

அவன் ஒரு பழத்தைச் சாப்பிட்டதும் தோட்டத்தில் வேலை செய்து கொண்டிருந்த தந்தையிடம் ஓடிப்போய்க் கொடுத்தான்.

அவர் ஒரு பழத்தை எடுத்துச் சாப்பிட்டதும், சமையல் அறையில் இருந்த மனைவியின் நினைவு வந்து; அவளிடம் ஒரு பழத்தைக் கொண்டு போய்க் கொடுத்தார்.

அதை மகிழ்ச்சியோடு வாங்கிக் கொண்ட மனைவி, இந்தத் திராட்சைக் கொத்து எங்கிருந்து புறப்பட்டதோ அந்த இடத்துக்கே திரும்பி வந்து விட்டது" என்று அன்புடன் கூறினாள்.

பாசம் என்பதும் இப்படித்தான் சுற்றிச் சுற்றி வரும் என்று நினைத்தனர் கணவனும் மனைவியும்.

# 48

# புத்திசாலி வேடன்

வேடன் ஒருவன் குளத்தின் அருகில் வலையை விரித்து இருந்தான். அதில் கொஞ்சம் தானியங்களையும் போட்டிருந்தான்

பல பறவைகள் அந்த வலையில் சிக்கிக் கொண்டன.

பறவைகள் பெரிதாக இருந்ததால், வலையோடு பறந்தன.

அவற்றைத் தொடர்ந்து வேடனும் ஓடினான்.

வழியில் கிழவன் ஒருவன் வேடனைப் பார்த்து, "எங்கே நீ ஓடுகிறாய்?" என்று கேட்டான்.

"பறவைகளைப் பிடிப்பதற்காக ஓடுகிறேன்" என்றான் வேடன்.

"உயரப் பறக்கும் பறவைகளை, தரையில் ஓடிப் பிடித்து விடமுடியுமா?" என்றான் கிழவன்

அதற்கு வேடன், "வலையில் ஒரு பறவை மட்டும் இருந்தால், பிடிக்க இயலாது. ஆனால், எப்படியும் இவைகளைப் பிடித்து விடுவேன்" என்றான்.

வேடன் சோர்வு அடையாமல், பறவைகளைப் பின்தொடர்ந்து போய்க் கொண்டிருந்தான்.

மாலை வேளை வந்தது. பறவைகள் அனைத்தும் கூட்டுக்குச் செல்வதற்காக, ஒவ்வொரு திசையில் வலையை இழுத்தது. ஒன்று காட்டை நோக்கி இழுத்தது, இன்னொன்று மரத்தை நோக்கி இழுத்தது; வேறு ஒன்று வயலை நோக்கி இழுத்தது.

அதனால் பறவைகளின் எண்ணம் நிறைவேறாமல் எல்லாப் பறவைகளும் வலையோடு தரையில் விழுந்தன.

வேடன் மகிழ்ச்சியோடு, வலையிலிருந்து ஒவ்வொரு பறவையாக எடுத்து தன்னுடைய கூடைக்குள் போட்டுக் கொண்டான்.

*ஒற்றுமை இல்லாவிடில் அழிவுதான்!*

# 49

## சந்நியாசி சம்சாரி ஆனான்

ஒரு சிற்றூரில் சந்நியாசி ஒருவன் இருந்தான். அவன் நாள்தோறும் வீடுவீடாகச் சென்று, பிச்சை எடுத்து உண்டு, இரவில் மரத்தடியில் தூங்குவான்.

ஊரை ஒட்டியுள்ள புறம்போக்கு நிலத்தில் சிறுகுடிசை போட நினைத்தான். அதற்காக பலரிடம் யாசகம் வாங்கி, ஒரு குடிசையைக் கட்டினான்.

பக்கத்தில் இருந்த காலி இடத்தில், கீரை முதலிய காய்கறிகளைப் பயிர் செய்தான், அதை விற்று, கிடைத்த பணத்தில் தானே சமைத்து உண்ண தொடங்கினான்.

குடிசையில் எலித்தொல்லை உண்டாயிற்று. அவனுடைய வேட்டி துண்டுகளை எலிகள் கடித்து குதறிக் கொண்டிருந்தன.

அதற்காக, பூனை ஒன்று வாங்கி வளர்க்கலானான்.

பூனைக்குப் பால் வாங்கி வருவதற்காக ஒருவேலைக்காரியை ஏற்பாடு செய்தான்.

காய்கறி விற்பனையால் கிடைத்த பணம், சிறுகச்சிறுக சேர்ந்து இருந்ததால், ஒரு பசுவை வாங்கிக் கட்டினான்.

பூனைக்குப் பால் கிடைத்தது, தானும் தினமும் பால் குடித்தான். பால் கறக்கவும், பசுவைக் கவனித்துக் கொள்ளவும் சமைக்கவும் பழைய வேலைக்காரியை முழுநேரமும் வேலைபார்க்கும்படி ஏற்பாடு செய்து கொண்டான்.

சில நாட்களுக்குப் பிறகு, அந்த சந்நியாசி, வேலைக்காரியையே தன் மனைவியாக வைத்துக் கொண்டான்.

*'சந்நியாசி கோவணம் காத்த கதை' என்று மக்கள் கூறுவார்கள்.*

# 50

# குழந்தையிடமிருந்து கற்றுக் கொண்டாள்

கணவனும் மனைவியும் ஒரு கிராமத்தில் வாழ்ந்து வந்தனர்.

கணவன் ஒரு கடையில் குறைந்த சம்பளத்தில் வேலை பார்த்தான்.

மனைவியின் பிறந்த வீடு வசதியானது. ஆகையால் அங்கே இருந்து அவ்வப்போது தேவையானவற்றை வாங்கி வந்து குடும்பத்தைச் சமாளித்தாள்.

அதனால் கர்வம் கொண்டு, கணவனைக் கேவலமாகப் பேசி வந்ததுடன் 'உருப்படாதவரே!' என்று சொல்வாள், அப்படியே கூப்பிடுவாள்.

மனைவியின் அலட்சியத்தால் அவன் பொறுமை இழந்து, ஒரு நாள் வீட்டைவிட்டு சொல்லாமல் வெளியேறி விட்டான்.

'அவர் எங்கே போனார்' என்ன ஆனார், என்பதைப் பற்றி சிறிதும் அவள் கவலைப்படவே இல்லை.

மூன்று மாதங்கள் அலைந்து திரிந்து சரியான வேலை கிடைக்காமல், பட்டினியோடு வீட்டுக்குத் திரும்பி வந்தான்.

ஆனால், தயங்கியபடி வாயிற்படியில் நின்று கொண்டிருந்தான்.

அவனுடைய மூன்றரை வயதுப் பெண் குழந்தை அவனைப் பார்த்ததும் வீட்டுக்குள் ஓடிப் போய், "அம்மா! நீ எப்போதும் 'உருப்படாதவரே' என்று சொல்லிக் கொண்டிருப்பாயே! அந்த உருப்படாதவர்' வந்து வாசற்படியல் நிற்கிறார்" என்று கூறியது.

அடுக்களையிலிருந்து மனைவி வந்து பார்த்தாள். கணவன் நின்று கொண்டிருந்தான். அவனை உள்ளே அழைத்தாள்.

தான் கூறுவதைக் கவனித்துக் கேட்டுக் கொணடிருந்த குழந்தை, 'அப்பா' என்று கூறாமல், 'உருப்படாதவர்' என்று குழந்தை கூறியதை நினைத்துக் கண் கலங்கிவிட்டாள். வெட்கப்பட்டாள்.

பிறகு கணவனை அப்படி அலட்சியமாக கூப்பிடாமல், மரியாதையாக நடந்து கொண்டாள்.

கணவனின் வருமானம் குறைவாக இருந்தாலும் அல்லது தான் வேலை பார்த்துச் சம்பாதித்தாலும் சில மனைவியரிடையே அலட்சியப் போக்கு இருக்கவே செய்யும்.

# 51. விவசாயிக்குக் கிடைத்த பரிசு

ஒரு ஜமீன்தாருக்குச் சொந்தமான வயலில் கூலிக்காக விவசாயி ஒருவன் வேலை செய்து வந்தான்.

ஒரு நாள் விவசாயி அந்த வயலில் ஒரு தங்க மோதிரத்தைக் கண்டு எடுத்தான். அதைப் பார்த்ததும் அவன் மனைவி மிகவும் ஆவலோடு தனக்குக் காதோலை செய்துதரும்படி கேட்டாள்.

அதை அறிந்த விவசாயி, இந்த வயல் ஜமீன்தாருக்குச் சொந்தமானது. எனவே அதில் கிடைக்கும் பொருள் அவருக்கு உரிமையானது ஆகும். அதை நாம் வைத்துக்கொள்வது தவறாகும் என்றான். அவன் கூற்று அவளுக்குத் திருப்தி அளிக்கவில்லை. "ஜமீன்தாரா வந்து அதைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்? அவருக்கு எவ்வாறு தெரியப் போகிறது?" என்று கேட்டாள் மனைவி.

"அவர் வந்து பார்க்கவில்லைதான். ஆனாலும் நம்முடைய மனம் பார்த்துக் கொண்டிருக்கிறதே" என்று கூறிவிட்டு மோதிரத்தைக் கொண்டு போய் ஜமீன்தாரிடம் கொடுத்தான் விவசாயி.

ஜமீன்தார் மிகவும் ஆச்சரியத்தோடு "அந்த மோதிரத்தை நீயே வைத்துக் கொண்டிருக்கலாமே! எனக்கு எப்படி தெரியப்போகிறது?" என்று கூறி அவனுடைய நேர்மையைப் பாராட்டி பரிசு அளித்தார்.

# 52. துறவியின் பொறுமை

கங்கை நதிக்கரையில் துறவி ஒருவர் கடினமான தவத்தில் ஈடுபட்டி ருந்தார்.

அவருடைய தவத்தின் நோக்கம், தேவலோகம் போகவோ, பெரிய பதவி பெற வேண்டும் என்பதோ அல்ல! அதற்கு மாறாக, தமக்குப் பயன்படாத இந்த உடல், பிராணிகளுக்காகவாவது பயன்படட்டுமே என்ற எண்ணம் கொண்டிருந்தார்.

அவரைச் சுற்றிலும் கழுகுகளும், கோட்டான்களும் வட்டம் இட்டுக் கொண்டிருந்தன.

சற்று தொலைவில் உள்ள நகரத்தின் அரசன், தன் ராணிகளுடன், ஆற்றுக்கு அருகில் இருந்த மலர்ச்சோலைக்குச் சுற்றுலா வந்து இருந்தான்.

அப்போது, அரசன் அளவுக்கு அதிகமாக மது அருந்தி விட்டதால், போதையில் அங்கேயே விழுந்து கிடந்தான்.

அந்த நேரத்தில் அரசனின் ராணிகள் பொழுது போக்குவதற்காக மலர்ச் சோலையின் வனப்பைக் களிக்கச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

அருகில் துறவி தவத்தில் இருப்பதைக் கண்டனர்.

அவரை நெருங்கிப் பார்த்தபோது, அவருடைய முகப்பொலிவு, ராணிகளுக்கு மரியாதை உணர்வை ஊட்டியது. அதனால் அவர்கள் துறவியைச் சுற்றி உட்கார்ந்திருந்தனர்.

ராணிகளைக் காணாமையால் தேடி வந்தான் அரசன்.

துறவியைச் சுற்றி, அவருடைய முகப் பொலிவைப் பார்த்துக் கொண்டு ராணிகள் தங்களை மறந்தபடி இருந்தனர்.

அந்த நிலையைப் பார்த்த அரசன், சினம் கொண்டான். பொறாமை அவனை உலுக்கியது.

ஆத்திரம் அடைந்த அரசன், தன் உடைவாளைக் கொண்டு துறவியின் அங்கங்களைச் சிதைத்தான்.

அந்தச் சமயத்தில் அங்கே ஒரு பேய் உருவம் தோன்றியது.

"துறவியே! உத்தரவிடு! உன் அங்கங்களைத் துண்டித்த அந்தக் கொடுமைக்கார அரசனைக் கொன்று விடுகிறேன்." என்றது. துறவி அதற்குச் சம்மதிக்கவில்லை.

"உன் கருணைக்கு நன்றி! அரசன் எனக்கு கெடுதல் செய்யவில்லை. என் அங்கங்களை அவன் வெட்டியதால், சுற்றிவட்டமிடும் பிராணிகளுக்குப் பேருதவி செய்திருக்கிறான். ஆகையால் நன்மை செய்துள்ள அவனை ஒன்றும் செய்யாதே" என்று கனிவுடன் சொன்னார் துறவி.

# 53. முட்டாள் மகன்

ஒரு நகரத்தில் பணக்கார வியாபாரி ஒருவன் இருந்தான்.

அத்தியாவசியப் பொருள்களை வண்டியில் ஏற்றிக் கொண்டு, ஒரு தீவுக்குச் சென்று விற்று வருவது அந்த வியாபாரியின் தொழில்.

வியாபாரிக்கு ஒரு மகன் இருந்தான். அவன் படிக்கவில்லை. இளைஞனாக இருக்கும் போதே தன் மகனுக்கு தன்னுடைய வியாபாரத்தைக் கற்றுக் கொடுக்க வேண்டும் என்று நினைத்தான் தந்தை.

பொருள்களைச் சேகரித்துக் கொண்டு தீவுக்குப் புறப்படத் தயாரானான் வியாபாரி.

அப்போது விலை உயர்ந்த ஒருவித வாசனை மரக் கட்டைகளையும் கொண்டு சென்றால், நல்ல விலைக்கு விற்கலாம் என்று நினைத்து, நிறையக் கட்டைகளை வண்டியில் ஏற்றிக் கொண்டு, கூடவே மகனையும் அழைத்துச் சென்றான் வியாபாரி.

தீவில், வழக்கம் போல் கொண்டு போன பொருள்கள் யாவும் விற்பனை ஆயின! ஆனால், புதிய வாசனை மரக்கட்டைகளை மட்டும் தீவில் உள்ள மக்கள் விரும்பவில்லை.

அதனால் அவற்றைத் திரும்பக் கொண்டு வரத் தீர்மானித்திருந்தான் வியாபாரி.

வேறு பொருள் ஏதாவது வாங்கி, தன்னுடைய ஊருக்குக் கொண்டு போய் விற்கலாமே என்ற எண்ணத்தில் பல பகுதிகளுக்கு அலைந்தான் வியாபாரி.

வியாபாரி வெளியே போயிருந்த சமயம் மகன் மட்டும் இருந்தான். தீவுவாசிகள் கரிமூட்டை வாங்கிச் செல்வதைப் பார்த்தான்.

விற்பனை ஆகாமல் கிடந்த வாசனைக் கட்டைகளைச் சுட்டு கரியாக்கி விற்றுவிட்டான் மகன்.

மேலும் புத்திசாலித்தனமாகத் தான் செய்து விட்டதாக நினைத்து மகிழ்ந்து போனான் வியாபாரியின் மகன்.

வியாபாரி திரும்பி வந்தார். "அப்பா! மிகவும் புத்திசாலித் தனமாக வாசனைக் கட்டைகளை வாங்காத இந்தத் தீவு மக்களிடம் கரியாக்கி விற்று விட்டேன்" என்று பெருமையாகக் கூறினான்.

"அடமுட்டாளே! நல்லவிலைக்கு விற்க வேண்டிய வாசனைக் கட்டைகளைக் கரியாக்கி நஷ்டம் ஏற்படுத்தி விட்டாயே?" என்று தலையில் அடித்துக் கொண்டு வருந்தினான் வியாபாரி!

# 54. புத்திசாலி பிழைப்பான்

ஒரு ஊரில் நான்கு இளைஞர்கள் இருந்தனர். அவர்களில் மூன்று பேர் சகல கலைகளையும் கற்றுத் தேர்ந்தவர்கள். ஆனால் அவர்களுக்குப் புத்தி என்பது கொஞ்சம் கூட இல்லை. அவர்களில் மற்றொருவன் போதிய கல்வி அறிவு இல்லாதவன். ஆனால் புத்திசாலித்தனம் உடையவன்.

ஒரு நாள் நான்கு இளைஞர்களும் கூடி ஆலோசித்தனர். வேற்று நாட்டுக்குச் சென்று அங்குள்ள அரசனை மகிழ்வித்து பொருள் தேட வேண்டும் இல்லையானால், கற்ற கல்வியின் பயன் என்ன? என்று யோசித்து வெளிநாடு செல்லத் தீர்மானித்தனர்.

ஒரு நாள் நால்வரும் ஊரைவிட்டுப் புறப்பட்டனர். வழியில், நம் "நால்வரில் மூவரைத்தவிர, மற்றொருவன் கல்வி அறிவு இல்லாதவன். ஆனால் அவன் புத்திசாலி, கல்வி இல்லாமல் புத்திசாலித்தனத்தால் அரசனை மகிழ்வித்துவிட இயலாது. நாம் தேடும் பொருளில் அவனுக்கு எப்படி பங்கு கொடுக்க இயலும். எனவே அவன் திரும்பி வீட்டுக்குப் போகட்டும்" என்றான் முதலாமவன்.

அப்பொழுது இரண்டாவது நண்பன், அறிவற்றவனே, உனக்குக் கல்வி அறிவு இல்லையாதலால், நீ எங்களுடன் வர வேண்டாம். நீ வீட்டுக்குத் திரும்பி செல்வாயாக" என்று கூறினான்.

மூன்றாவது நண்பன், இவ்வாறு கூறுவது நியாயம் இல்லை. ஏனெனில் இளமைப் பருவம் தொடங்கி இதுவரை ஒன்றாகப் பழகி, விளையாடி வந்திருக்கிறோம். இப்பொழுது அவனைப் புறக்கணிப்பது சரியல்ல. நண்பா, நீ எங்களுடன் வரலாம். நாங்கள்

சம்பாதிப்பதில் உனக்கும் ஒரு பங்கு தருகிறோம்.'' என்று ஆதரவாகக் கூறினான்.

எல்லோரும் சம்மதித்துப் புறப்பட்டனர்.

வழியில் ஒரு சிங்கத்தின் எழும்புக் கூட்டைப் பார்த்தனர். அவர்களில் ஒருவன், "நாம் கற்றுக் கொண்ட கலைகளையும், கல்வியையும் சோதித்துப் பார்த்துக் கொள்ள இப்பொழுது ஒரு சந்தர்ப்பம் நமக்கு வாய்த்து இருக்கிறது. ஆகையால் இங்கே இறந்து கிடக்கும் மிருகத்தை நம் வித்தையின் பெருமையால் உயிர்பெற்று எழச் செய்வோம்'' என்றான்.

அப்பொழுது ஒருவன், "எனக்கு எலும்புகளை ஒன்று சேர்க்கத் தெரியும்'' என்றான்.

"தோலும், சதையும், இரத்தமும் அளிக்க என்னால் இயலும்'' என்றான் மற்றொருவன்.

"அதற்கு உயிர் அளித்து என்னால் எழச் செய்ய இயலும்'' என்றான் இன்னொருவன்.

"பிறகு ஒவ்வொருவரும் சொன்னபடி, ஒருவன் எலும்புகளை எல்லாம் இணைத்துப் பொருத்தினான். அடுத்தவன் தோல், சதை, இரத்தத்தை நிரப்பினான். மூன்றாவது நண்பன், அதற்கு உயிர் கொடுக்க ஈடுபடும் பொழுது, அவனைத் தடுத்து, "நண்பனே, இது சிங்கம்! இதற்கு நீ உயிர் ஊட்டி எழச் செய்தால், அது நம்மைக் கொன்று தின்றுவிடும். ஆகையால் உயிர் அளிக்க வேண்டாம்'' என்று கூறினான் புத்திசாலியான நான்காவது ஆள்.

"முட்டாளே, மற்ற இருவரும் தங்கள் வித்தையைக் காட்டிவிட்டனர். ஆனால் நான் கற்ற வித்தையை பயனற்றதாக்க விரும்பவில்லை.'' என்றான் மூன்றாவது நண்பன்.

"அப்படியானால் ஒரு கணம் பொறுத்துக் கொள். அதற்குள் நான் இந்த மரத்தின் மீது ஏறிக் கொள்கிறேன்." என்று கூறி, அவ்வாறே மரத்தில் ஏறிக்கொண்டான் புத்திசாலி நண்பன்.

மூன்றாவது நண்பன், சிங்கத்துக்கு உயிர் உண்டாகச் செய்தான்.

உயிர் பெற்று எழுந்தது சிங்கம். எதிரே மூன்று மனிதர்களைப் பார்த்தது, உடனே அவர்கள் மீது பாய்ந்து மூவரையும் கொன்று தின்று விட்டது.

புத்திசாலி மட்டும் உயிர் பிழைத்து ஊருக்குச் திரும்பினான்.

## 55. கொஞ்சமாவது படித்திருக்கிறாயா?

ஆற்றங்கரையில் ஒருவன் துணி துவைத்துக் கொண்டிருந்தான். அந்தச் சமயத்தில் குளிக்கப்போன ஒருவன் ஆழத்தில் சிக்கிக் கொண்ட ான்.

துணி துவைத்துக் கொண்டிருந்தவனைப் பார்த்து, "தோழனே! என்னைக் காப்பாற்று" என்று குரல் கொடுத்தான்.

"உன்னைக் காப்பாற்றினால், எனக்கு என்ன தருவாய்" என்று கேட்டான் துணி துவைத்தவன்.

"நான் படித்தவன் உனக்குக் கல்விக் கற்றுத் தருகிறேன்" என்றான் தண்ணீரில் சிக்கிக் கொண்டவன்.

துணி துவைப்பவன் சரி என்று அவனிடம் நெருங்கும் போது "நீ கொஞ்சமாவது படித்திருக்கிறாயா? இல்லையா? என்று கேட்டான்.

“நான் ஒன்றுமே படிக்கவில்லை” என்றான் துணி துவைத்தவன்.

“உனக்கு ஆரம்பத்திலிருந்து என்னால் கற்றுத்தர முடியாது. நான் ஆற்றோடு போனாலும் போகிறேன்” என்று கூறிவிட்டான் அவன்.

## 56. தண்டனையில் பங்கு உண்டா?

காட்டில் பதுங்கியிருந்து, அவ் வழியாகப் போவோர் வருவோரைக் கொள்ளை அடித்துக் கொண்டிருந்தான் ஒருவன்.

அதை அறிந்த பெரியவர் ஒருவர், கையில் பணப்பையோடு காட்டு வழியாகச் சென்றார்.

அவரை மறித்து நிறுத்தினான் கொள்ளைக்காரன்.

அவனைப் பார்த்து பெரியவர், “அப்பா, பணப்பையை உனக்கே தந்து விடுகிறேன். எனக்கு ஒரு சந்தேகம். அதைத் தெரிவித்து விட்டுப் பணப்பையை எடுத்துக்கொள். அதுவரை நான் இங்கேயே இருப்பேன்” என்றார்.

“உமக்கு என்ன சந்தேகம்?” என்றான் திருடன்.

“நீ கொள்ளையடித்து உன் குடும்பத்தினரைக் காப்பாற்றுகிறாயே! உனக்குக் கிடைக்கும் தண்டனையில் (பாவத்தில்) அவர்கள் பங்கு கொள்வார்களா? அதைத் தெரிந்து வந்து சொல்” என்றார் பெரியவர்.

கொள்ளைக்காரன் குடும்பத்தாரிடம் சென்று, “நான் கொள்ளையடித்துக் கொண்டு வந்து தருகிறேன். நீங்கள் உண்டு

சுகமாக இருக்கிறீர்கள், எனக்கு ஏற்படக் கூடிய பாவத்தில் (தண்டனை) உங்களுக்குப் பங்கு உண்டா? ஏற்பீர்களா?" என்று கேட்டான்.

"அது எப்படி முடியும்? உன் தண்டனை உன்னோடுதான்! நீ கொண்டு வந்து தருகிறாய் நாங்கள் அதை அனுபவிக்கிறோம்" என்று கூறினர்.

அப்பொழுதே, கொள்ளைக்காரனுக்கு அறிவு வேலை செய்யத் தொடங்கி விட்டது.

பெரியவரிடம் வந்து வணங்கி, "உங்களுடனே நான் வருகிறேன்!" என்று கூறி, பெரியவரைப் பின் தொடர்ந்தான் கொள்ளைக்காரன்.

## 57. எதைத் திருடினான்?

ஒரு வணிகன் முக்கிய உணவுப் பொருள்களை அடுத்த ஊர் சந்தைக்குக் கொண்டு போய் நல்ல விலைக்கு விற்று பணத்தை ஒரு பையில் போட்டுப் பூட்டிக் கொண்டு ஊருக்குத் திரும்பினான்.

வழியில் ஒரு கோயிலைக் கண்டான் அங்கே போய் வணங்கிவிட்டுத் திரும்பச் சென்றான். பணப்பையை கோயிலில் மறந்து வைத்து விட்டான்.

கோயிலுக்கு வந்த பள்ளி ஆசிரியர் கடவுளை வணங்கி திரும்பும்போது அந்தத் தோல் பையைப் பார்த்தார். அருகில் எவரும் இல்லாததால், அதை எடுத்துக் கொண்டு வீட்டுக்குச் சென்றார். அவருடைய வீடு கோயில் வீதியிலேயே இருந்தது. வீட்டிற்குப்

போனதும், "பணப்பையை இழந்தவர் இங்கே விசாரிக்கவும்" என்று ஒரு அட்டையில் எழுதி, வீட்டு முகப்பில் தொங்க விட்டார்.

வழியில் போய்க்கொண்டிருந்த வணிகனுக்குப் பணப்பை நினைவு வந்தது, பரபரப்போடு கோயிலுக்கு ஓடிவந்து விசாரித்தான். எவருக்கும் தெரியவில்லை. மிகவும் துக்கத்தோடு திரும்பி போய்க் கொண்டிருக்கும்போது, ஒரு வீட்டின் முகப்பில் அறிவிப்பைப் பார்த்தான். உள்ளே போய் விவரத்தைக் கூறி, சாவியைக் காட்டி பையைப் பெற்றுக் கொண்டான்.

உடனே பையைத் திறந்து பாதித் தொகையை அந்த ஆசிரியர் முன் வைத்து "உங்களுடைய நேர்மைக்காக நான் பரிசு அளிக்கிறேன். எடுத்துக் கொள்ளுங்கள்" என்று சொன்னான் வணிகன்.

"உன் பணம் எனக்கு எதற்கு?" என்று கூறி அதைத் தொட மறுத்துவிட்டார் ஆசிரியர்.

வணிகனும் எவ்வளவோ கூறினான். ஆசிரியர் பிடிவாதமாக மறுத்துவிட்டார்.

அந்தத் தொகையை அங்கே வைத்துவிட்டு, பையை எடுத்துக் கொண்டு வணிகன் ஓடினான்.

"திருடன், திருடன்" என்று கூறிக்கொண்டே ஆசிரியர் அவனைத் துரத்தினார்.

வழியில் சென்றோர் வணிகனைப் பிடித்து நிறுத்தி, "அவன் என்ன திருடினான்?" என்று கேட்டனர்.

"என்னுடைய நேர்மையையும், இதுவரை நான் காப்பாற்றி வந்த மதிப்பையும் திருடிக் கொண்டான்" என்று கூறி, நடந்ததை விவரமாகக் கூறினார் ஆசிரியர்.

# 58. மூத்தவனுக்கு ஏற்பட்ட மதிப்பு

ஒரு ஊரில் ஐந்து சகோதரர்கள் இருந்தார்கள். அவர்களுக்குத் தகப்பன் இல்லை. தாய் மட்டுமே இருந்தாள்.

மூத்தவன் வீட்டில் இருந்து குடும்பத்தைக் கவனித்தான். ஊர் விவகாரங்களையும் தீர்த்து வைத்துக் கொண்டிருந்தான்.

மற்ற நால்வரும் சொந்த நிலத்தை உழுது பயிர் செய்து வந்தனர். எல்லோரும் ஒற்றுமையாக இருந்தார்கள்.

மூத்தவனிடம் ஊர்க்காரர்கள் வந்து மரியாதையாக யோசனைக் கேட்டுப் போவதால், தாய்க்கு அவனிடம் பிரியம். அவனுக்கு அரிசிச் சோறும், மற்றவர்களுக்கு கம்மஞ் சோறும் போடுவாள்.

ஒரு நாள் சகோதரர்களுக்குள் ஏதோ வாக்குவாதம் முற்றியது.

மூத்தவனிடம், “நாங்கள் உழவு வேலை பார்ப்பதும், நீ வீட்டில் இருப்பதும் என்ன நியாயம்? நீயும் எங்களுடன் வந்து உழவு வேலையைக் கவனி” என்று சொன்னார்கள்.

மறுநாள், அவர்களோடு மூத்தவனும் புறப்பட்டான்.

தாய்க்கு மூத்தவனைப் பற்றிக் கவலை, உழவு வேலைக்கு போகாதவன் வெயிலில், கலப்பை பூட்டி எப்படி உழுவானோ என்று வருத்தப்பட்டாள்.

நால்வருக்கும் கம்மஞ்சோறு கட்டி, மூத்தவனுக்கு மட்டும் அரிசிச் சோறும், பதார்த்தமும் வைத்துக்கட்டி, எல்லாவற்றையும் ஒரே பொட்டலமாகக் கொடுத்து அனுப்பினாள் தாய்.

அடுத்த ஊரிலிருந்து மூத்தவனைத் தேடி ஒரு விவகாரம் வீட்டுக்கு வந்தது. விசாரித்து விஷயம் தெரிந்து கொண்டு நிலத்துக்குச் சென்றனர்.

விவகாரம் சொல்ல வந்தவர்களில் ஒருவன் மூத்தவனிடம், "ஐயா, இந்த விவகாரத்தை தீர்த்து வையுங்கள். உங்களுக்குப் பதிலாக நான் உழுகிறேன்" என்று சொல்லி, கலப்பையைக் கட்டி உழத் தொடங்கினான்.

வேப்ப மரத்து நிழலில் பஞ்சாயத்து நடந்து கொண்டு இருந்தது.

கலப்பையைக் கட்டி உழத் தெரியாமல் அண்ணன் முழிப்பான். அதன் பின், ஏர்பூட்டி வெயிலில் உழும்போது, இப்பொழுது தெரிகிறதா? உழுவதில் உள்ள கஷ்டம்? என்று அவனிடம் கேட்கலாம் என்று எண்ணிக் கொண்டிருந்த தம்பிகளுக்கு ஏமாற்றம் ஆகிவிட்டது. விவகாரத்துக்கு வந்தவன் அவனுக்காகவே உழுகிறானே அண்ணன் மரத்து நிழலில் கால் மேல் கால் போட்டு, விவகாரம் தீர்த்துக் கொண்டிருப்பான் என்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை.

விவகாரம் தீர்ந்தது. வந்தவர்கள் போய் விட்டார்கள்.

பகல் உணவுக்காக, சகோதரர்கள் உழவை நிறுத்திவிட்டு மரத்து அடியில் வந்து உட்கார்ந்தார்கள். ஆளுக்கு ஒரு பொட்டலத்தை பெரிதாகப் பார்த்து எடுத்துக் கொண்டனர். சிறிதாக இருந்ததைத் தொடவில்லை.

அண்ணன் வந்து, மீதி இருந்த ஒரு பொட்டலத்தை எடுத்துப் பிரித்தான். சகோதரர்கள் அதைப்பார்த்ததும் வியப்படைந்தனர். "நிலத்துக்கு வந்தும்கூட, அண்ணனுக்கு அரிசிச் சோறு

கிடைத்திருக்கிறதே. அது நம் கண்ணில் படவில்லையே" என்று பேசிக்கொண்டனர்.

பொட்டலத்திலிருந்த பதார்த்தத்தை எடுத்து சகோதரர்கள் ஒவ்வொருவருக்கும் பிரியத்தோடு வற்புறுத்தி, கொஞ்ச கொஞ்சம் கொடுத்து தானும் உண்டான்.

சகோதரர்கள் மூத்தவனிடம், "நாளை முதல் நீ உழுவதற்கு வரவேண்டாம். முன் போலவே, வீட்டிலேயே இருந்து, வழக்கம்போல் காரியங்களை பார்த்துக்கொள். எங்களுக்குப் பொறாமை இல்லை, அவரவர்களுக்கு உள்ளதுதான் கிடைக்கும்" என்று கூறினார்கள்.

## 59. எது நியாயம்?

ஒரு கிராமத்தில் ஒரு விவசாயி இருந்தான். அவனுடைய நிலத்தின் ஒரு பகுதியை, அடுத்த நிலத்துக்காரன் தன்னுடைய நிலத்தோடு சேர்த்துக் கொண்டு உழுது பயிரிட்டு வந்தான்.

"என்னுடைய நிலத்தின் பகுதியை, நீ உன்னுடைய நிலத்தோடு சேர்த்துக் கொள்ளலாமா? இது நியாயமா?" என்று கேட்டான்.

"நியாயம் அநியாயம் என்பது எனக்குத் தேவையில்லை. அது என்னுடைய நிலத்தை ஒட்டியிருப்பதால், அது எனக்கே சொந்தமானது" என்று முரட்டுத் தனமாகப் பதில் சொன்னான்.

கிராமப் பஞ்சாயத்தாரிடம் போய் முறையிட்டான். அவர்கள் அவனை வரவழைத்து விசாரித்தார்கள். "அது என்னைச் சேர்ந்தது. திருப்பிக் கொடுக்க முடியாது" என்று மறுத்து விட்டான்.

நிலத்தை இழந்தவன் மிகவும் வருத்தத்தோடு இருந்தான். அவன் மனைவி, "அவனை சும்மா விட்டுவிடக் கூடாது. நீதிமன்றத்தில் வழக்குப் போட்டு நியாயம் கேட்கவேண்டும்" என்று யோசனை சொன்னாள்.

விவசாயி உடனே ஒரு வழக்கறிஞரிடம் போய் விவரம் கூறி, வழக்குத் தொடுத்தான்.

நீதிமன்றத்திலே நிலத்தை இழந்த விவசாயிக்குப் பாதகமாக தீர்ப்புக் கிடைத்தது.

"அதற்கு மேல் ஒரு நீதிமன்றம் இருக்கிறது; அங்கே போய் வாதாடலாம்" என்றார் வழக்கறிஞர். அதன்படி அங்கே போய் வாதாடியதில் அதிலும் பாதகமாக தீர்ப்புக் கிடைத்தது.

"இன்னொரு நீதி மன்றம் இருக்கிறது. அதில் நிச்சயம் நமக்கு வெற்றி கிடைக்கும்" என்றார் வழக்கறிஞர்.

விவசாயி, "ஐயா, நான் இழந்த நிலம் சிறு பகுதிதான். அதை மீட்பதற்காக, நான் செலவு செய்த பணம் அந்த நிலத்தின் விலை மதிப்பைக் காட்டிலும் நான்கு மடங்கு ஆகும். மேலும், என்னுடைய விவசாய வேலைகளையும் கவனிக்க முடியாமல் அது வேறு நஷ்டம்! முட்டாள்தனம் செய்து விட்டேன். இனி, இன்னொரு நீதிமன்றத்துக்குப் போகவும் வழக்காடவும் என்னிடம் ஒரு காசு கூட இல்லை. அநியாயக்காரனைக் கடவுள் தண்டிக்கட்டும் என்றான்.

# 60. சிக்கனமாக இருப்பது எப்படி?

தன் மகனுக்குத் திருமணம் செய்து வைத்து, அவனைத் தனிக்குடித்தனம் நடத்துமாறு சொல்லி, வருமானத்துக்கான வழியையும் அவனுக்கு ஏற்பாடு செய்து கொடுத்தார் தந்தை.

வாரம் ஒரு முறை தந்தை வந்து மகனை பார்த்துச் செல்வது வழக்கம்.

ஒரு முறை தந்தை வந்திருந்தார். இரவு நேரம் தந்தையும் மகனும் பேசிக்கொண்டு இருந்தனர்.

"அப்பா! நீங்கள் எப்படி பணக்காரராக ஆனீர்கள்? என்னுடைய வருமானத்தோடு உங்களுடைய உதவி இருந்தும், எனக்கு பற்றாக் குறையாகவே இருக்கிறதே!" என்று கேட்டான் மகன்.

"மகனே, எதுவும் சுலபம் அல்ல! வாழ்க்கையில் மிகவும் கவனம் தேவை. தேவையற்ற செலவைச் செய்யக் கூடாது. வீட்டில் வெளிச்சத்துக்கு ஒரு விளக்கே போதும் என்றால், மற்றொரு விளக்கை எதற்காக எரிய விட வேண்டும்?" என்று கேட்டார் தந்தை.

உடனே மகன் எழுந்து தேவை இல்லாமல் எரிந்து கொண்டிருந்த மற்றொரு விளக்கை அணைத்தான்.

தந்தை எப்படி சிக்கனமாக இருந்து பணக்காரர் ஆனார் என்பதையும் புரிந்து கொண்டான்.



